# கல்கி



சாணக்யா :
- சிறப்புப் பேட்டி

KALKI 13.10.91 ரூ. 3.00

பொன்விழா ஆண்டு

துவக்கப் பள்ளிகள்:

அரசு ஆணை—
ஆண்களுக்கு அநீதியா?

கல்கியில் வெளியான "கைகொடுத்த கடன் தொகை" போட்டியில் பங்கு பெற்ற உண்மை சம்பவம்

# காலி மனையில் ஓர் அறை

மதுரையில், மத்திய அரசுத் துறையில் பணி. எல்லிஸ் நகரில், அரசுக் குடியிருப்பு ஒன்றில் வாசம். குடியிருக்கும் பகுதி என்பது ஒரே ஒரு அறை மட்டும்தான். ஆகவே பின்புறம் இருக்கும் காலி மனையில் ஓர் அறை கட்டலாம் என்று தோன்றியது.



சேமித்திருந்த பணத்தைக் கொண்டு அதைச் செய்து விட முடியும். காண்ட்ராக்டர் ஒருவரிடம் பேசி ஏற்பாடு செய்தோம். நிர்ணயித்தபடி எல்லாமே நடை பெற்று வந்தது. அடுத்துத் தோன்றிய எண்ணம் : வீட்டின் தரைப்பகுதி, உட்புறம், சீலிங் மீது ... இங்கெல்லாம் சில மராமத்து வேலைகளைக் கூடவே செய்து விட்டால் என்ன ?

அதற்காகும் செலவு எவ்வளவு என்று கணக்கிட்ட போது ஆறாயிரம் ரூபாய் தேவைப்பட்டது.

ஏற்கெனவே இருந்த தொகை பின்புறக் கட்டடத்துக்குச் சரியாகி விட்டது. அது தவிர, வீட்டிலேயே இருந்து கொண்டு மராமத்து வேலைகளையும் செய்து முடிப்பது என்றால் – உடனடியாக அதைச் செய்து முடிக்க வேண்டும்.

பணத்துக்கு என்ன வழி என்று யோசித்தபோது, ஏப்ரல் 90 ல் சேர்ந்த சீட்டுப் பணத்தை ஏலத்தில் எடுத்தால் என்ன என்ற எண்ணம் எழுந்தது.

அந்த மாதம் நடைபெற்ற ஏலத்தில் கலந்து கொள்ள ஸ்ரீராம் அலுவலகத்துக்குச் சென்றேன். அதிர்ஷ்டவசமாக, அன்று ஏலத்துக்கு யாருமே வரவில்லை. ஒருவர் மட்டும்தான் கேட்டிருந்தார். அதைவிடச் சற்றுக் கூடுதலாகக் கேட்டு ஏலம் எடுத்து விட்டேன். அடுத்த மாதம் பணம் கைக்கு வந்து, வீட்டு வேலைகள் முடிந்து, இப்போது மகிழ்ச்சியுடன் குடியிருந்து வருகிறோம். சீட்டுச் சேர்ந்தால் அது சமயத்தில் கைகொடுப்பது நிஜம்.

எஸ். பாக்யலக்ஷ்மி
மதுரை - 625 016.

★ கைகொடுத்த கடன் தொகை ★ கைகொடுத்த கடன் தொகை

வடக்கு வாசல் :

# தலைநகர் தலைகுனிகிறது!

கடந்த செப்டம்பர் 20-ம் தேதி தில்லி 'ப்ஹாடி தீரஜ்' பகுதியில் உள்ள லக்ஷ்மி தேவி பெண்கள் சீனியர் செகண்டரி பள்ளியில் நடந்த ஒரு அருவருக்கத்தக்க நிகழ்ச்சி தலைநகரையே தலைகுனிய வைத்து விட்டது.

இப்பள்ளியில் பத்தாம் வகுப்பில் படித்துவரும் மாணவி குமாரி ருசி, பரீட்சைக்குக் கட்டுவதற்காகக் கொண்டு வந்த நூற்று ஐம்பது ரூபாய் பணத்தைக் காணோமென்று பதைத்தாள். பரீட்சைக்குப் பணம் கட்ட அதுவே கடைசி நாள். செய்வதறியாமல் அழுது கணக்கு ஆசிரியையிடம் முறையிட்டாள்.

ஆசிரியை சுமார் எண்பது மாணவிகளுடைய புத்தகப்பைகளைச் சோதனையிட்டார். பணம் கிடைத்தபாடில்லை. அதனால் அந்த மாணவி பணமே கொண்டு வராமல் பொய் சொல்லுவதாகவும் மாய்மாலம் செய்வதாகவும் ஆசிரியை குற்றஞ் சாட்டினார். தான் பணத்தைத் தொலைத்து விட்டதாக அந்த மாணவி விடாமல் புலம்பவே கணக்கு ஆசிரியை, ருசியின் தாயை அழைத்து வரும்படி ஓர் ஊழியரை அனுப்பினார்.

ருசியின் தாய் பள்ளிக்கு வந்து சேருமுன் அதே பள்ளியைச் சேர்ந்த நூலகக் காப்பாளர் திருமதி ஊர்மிளா கம்பீர், உடற் பயிற்சி ஆசிரியை திருமதி ரஞ்சித்குமார் பக்ஷி இருவருமாகப் பத்தாம் வகுப்பு மாணவிகள் எண்பது பேரையும் ஓர் இடத்தில் கூட்டி னார்கள். பின் ஒவ்வொரு மாணவியாக 'மெடிக்கல் செக்-அப்' அறைக்குள் தள்ளி ஆடைகளை அவிழ்க்கச் சொல்லிச் சோதனை போடத் துவங்கினார்கள். சோதனைக்குள்ளான மாணவிகள் அவமானத்தால் குன்றிக் குறுகிக் கதறியபடியே வெளியே வர, பள்ளிப் பெண்கள் அத்தனை பேரும் கொதிப்படைந்தனர். அங்கே வந்த மற்ற ஆசிரியைகளிடம் முறையிட்டனர். ஆசிரியைகளும் அதிர்ந்தனர். இரக்கப்பட்ட இரு சீனியர் ஆசிரியைகள் துணிந்து மெடிக்கல் அறைக்குள் சென்று இந்த அக்கிரமத்தைத் தடுக்க எவ்வளவோ முயற்சி செய்தனர். 'இது பிரின்ஸிபால் திருமதி ஷைல் பாலா குப்தாவின் ஆணை. அதை மீற நாங்கள் யார்' என்று பிடிவாதமாக அந்த உடற்பயிற்சி ஆசிரியையும் லைப்ரேரியனும் கூறி விட்டனர். சில மாணவிகள் துணிந்து பிரின்ஸிபாலிடம் முறையிட அவர் ''அதனால் என்ன? குறைந்தா போய் விடுவீர்கள்?'' என்று திட்டித் துரத்திவிட்டதாகச் சொல்லப்படுகிறது. பணத்தைத் தொலைத்து விட்ட மாணவி ருசி கூட இந்தத் துச்சாதனத்தனத்துக்கு விலக்கல்ல. இதன் நடுவே கூப்பிட்டு அனுப்பிய படி பள்ளிக்கு வந்து விட்ட மாணவி ருசியின் தாய் எவ்வளவோ முறையிட்டும் சோதனைப் படலம் ஓயவில்லை.

> சில மாணவிகள் துணிந்து பிரின்ஸிபாலிடம் முறையிட அவர், ''அதனால் என்ன? குறைந்தா போய் விடுவீர்கள்?'' என்று திட்டித் துரத்தி விட்டாராம்.

விஷயம் காட்டுத்தீ போல் பள்ளிக்கு வெளியே பரவியது. பொது மக்கள் கூட்டம் பள்ளிக்கு அருகே அலைமோதியது. பயந்து ஓடிப் போய் பள்ளிக்கு எதிரேயுள்ள தன் வீட்டில் புகுந்து கொண்ட பள்ளி நூலகரைக் கூட்டம் விடுமா? அவர் வீட்டைச் சூழ்ந்து கொண்டு உள்ளே புகுந்து அவருடைய ஆடையைப் பற்றி இழுக்க, போலீஸ் தலையிட்டதில் இன்னொரு ''மானபங்கம்'' தடைபட்டது.

தொண்ணூறு வருடமாகப் பெருமையாகப் பள்ளியை நடத்திவரும் 'ஜெயின் சிக்ஷா பிரசார சமிதி'யின் நிர்வாகக் குழு உறுப்பினர்கள், ஜைன மதத்தினருக்கு மிகவும் விசேஷமான ''பருஷன் பர்வான்'' பண்டிகை கொண்டாடும் புனித நாளில் இந்தத் துயர நிகழ்ச்சி, தங்கள் ஜைன மதப் பள்ளியிலேயே நடந்துவிட்டதற்காக மக்களிடம் மன்னிப்புக் கேட்டனர். பிரின்ஸிபால், நூலகக் காப்பாளர், உடற்பயிற்சி ஆசிரியை மூவரையும் உடனடியாக தாற்காலிக வேலை நீக்கம் செய்தனர்.

''மாணவிகளின் பைகளைத்தான் சோதனை போடச் சொன்னேன். அதன் பிறகு என்ன நடந்ததென்று எனக்குத் தெரியவே தெரியாது'' என்று சாதித்துவிட்டு ஒரு 'நர்சிங் ஹோமில்' பதுங்கிவிட்டார் பிரின்ஸிபால்.

மூவரையும் காவல் துறையினர் கைது செய்து பிறகு ஜாமீனில் விட்டுள்ளனர்.

'உங்கள் மகள் ருசியின் அசட்டுத்தனத்தினால்தான் எங்கள் குழந்தைகள் தீராத அவமானப்பட்டனர்' என்று மற்ற மாணவிகளின் பெற்றோர் ருசியின் தாய் தந்தையரை இடித்துப் பழிக்கின்றனர். ''எல்லாக் குழந்தைகளும் எங்கள் ருசியைப் போலத்தான். நடந்தது மன்னிக்க முடியாத குற்றம். ஆனால் நாங்கள் குற்றவாளிகள் அல்ல'' என்று பொருமுகிறார் ருசியின் தந்தை. தன் பெண்ணின் படிப்பையும் நிறுத்தி வேற்றூருக்கும் அனுப்பிவிட்டுப் புலம்புகிறார்.

**மா**தர் சங்கங்களும், மாணவர் சங்கங்களும் ஆர்ப்பாட்டம் நடத்தி 'நீதி விசாரணை' கோருகின்றனர். அரசியல் கட்சிகளும் தங்கள் பங்குக்கு ஆதாயம் தேட முனைந்து அக்கப்போர் புரிகின்றன. மூடியிருந்த பள்ளி துவங்கி 'மாணவிகள் வருகை' தயக்கமாக முன்னேறுகிறது.

ஆசிரியைகளைச் சட்டத்தின் மூலம் தண்டிக்கலாம். ஆனால் வாழ்நாள் முழுவதும் மறக்க முடியாத இந்த அவமான அதிர்ச்சியிலிருந்து சம்பந்தப்பட்ட மாணவிகளை மீட்க எந்தச் சட்டம் துணை வரும்?

**- இருள்நீக்கி கணேசன்**

# பாரத் பந்த்



**தெ**லுங்கு தேசத்தவர்கள் சினிமாவில் ஒரு புதிய சூத்திரம் கண்டுபிடித்துவிட்டார்கள். மொழி மாற்றி, நம்ம ஊர் வந்து, லாரி லாரியாய்ப் புதையல் எடுக்கும் சூத்திரம். என்ன?

அரசியல் நிலவரத்தைக் கலவரமாக மிகைப்படுத்தவும். நாட்டு நடப்புகளைப் பூத மூக்குக் கண்ணாடி அணிந்து பார்க்கவும். பக்கெட்டில் சிவப்புச் சாயத்தை (ரத்தத்தை) நிரப்பி, படம் முழுக்கத் தெளிக்கவும். வில்லனை ஹீரோவாக்கி புதிய மானரிஸம் காட்டவும். ஆகிருதியுடன் புது முரடனை அறிமுகப்படுத்தவும். உருட்டுக் கட்டை, சைக்கிள் செயின் சின்னத்துடன் கொடியேற்றி, வானமெங்கும் வன்முறைக் கவிதை எழுதவும். கதாநாயகி அல்லது குழந்தையை (முடிந்தால் இருவரையும்) கொடுமைப்படுத்தி மனசுக்குள் ஊசி செருகவும். ஏக்கர் ஏக்கராய் வசன விசனம் தயாரிக்கவும்.

இந்த சூத்திரத்தைச் சுற்றிக் கதை பின்ன தீவிர வாதத்திற்கு மாலை போட்டு வரவேற்கிறார்கள். இவர்கள் விமர்சிக்கும் அரசியல், தவறு என்றால், தீவிரவாத வரவேற்பும் மகாதவறுதானே!

அரசோ, சென்ஸாரோ இதைக் கேட்க வேண்டாமா? ஊஹூம்.

கொலைத் தொழில் புரியும் ஓர் அடியாள் அரசியலைப் புரிந்து கொண்டு, நுழைந்து, முன்னேறி, முதல்வராகி, தன் குற்றவாளித் தோழர்களை அமைச்சர்களாக்கி ஆட்சி புரிகிறான். பிரச்னைகள் க்யூவில் நிற்கின்றன. இந்த அநியாயங்களை எதிர்த்து ஒரு கல்லூரிப் பேராசிரியை (அர்ச்சனா), ஒரு போலீஸ் அதிகாரி (வினோத்); அவர்கள் சந்திக்கும் சிரமங்கள். இதற்கிடையே அநியாயத்தை ஒழிக்க ஒரு தீவிரவாதக் குழு. தலைமையேற்பவர் ரகு. கடைசியில் தப்புச் செய்தவனுக்குத் தண்டனை, நீதி.

படம் முழுக்க அடிதடி, வெட்டு குத்து, துப்பாக்கிச் சூடு, போராட்டம், தீ, அமிலம், உருட்டுக்கட்டை, சைக்கிள் செயின் எனத் தென்பட்டு, கசாப்புக் கடைகளுக்குள் அரைமைல் சுற்றி வந்த உணர்வே மிஞ்சுகிறது.

**- சுந்தர்ஜி**

# பொன்விழா ஆண்டு | பொன்நகைப் பரிசுத் திட்டம் - 4 - முடிவு

# நவராத்திரி சிரிப்பு

சென்ற வருட நவராத்திரியின் போது எங்கள் வீட்டிற்குக் 'கொலு' பார்க்க வந்த என் தம்பி ஐயப்பனின் நண்பர்கள் மிகவும் குறும்புக்காரர்கள்.

'கொலு' பார்த்து விட்டு அவன் நண்பர்களில் ஒருவன் கேட்டான்: ''என்ன ஐயப்பா? சுண்டல் என்னாச்சு...?'' என் தம்பி சொன்னான் :''இன்னும் கொஞ்ச நேரத்தில் சுண்டல் ரெடி ஆயிடும். அது வரைக்கும் யாராவது ஒரு பாட்டுப் பாடுங்கள். கேட்கலாம்...''

உடனே ஒரு குறும்புக்கார நண்பன்,



'சுண்டலைத்தான் நாடி வந்தோம்
ஐயப்பா - அது
கிடைக்காமல் வாடி நின்றோம்
ஐயப்பா - உன்னை
கிண்டல் செய்யப் பாடவில்லை
ஐயப்பா
தண்டச்சோறும் நாங்கள் இல்லை
ஐயப்பா...'

என்று பாட ஆரம்பிக்க அங்கிருந்த அனைவரும் சிரித்து விட்டார்கள்.

வெ. கோவிந்தராஜன், தஞ்சாவூர்.

**பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறுமானமுள்ள பொன் நகை பரிசு பெறுகிறார் வெ. கோவிந்தராஜன், 25, பாலோபா நந்தவனம், தஞ்சாவூர் - 613008.**

## ஆறுதல் பரிசு பெறும் துணுக்குகள்:

கொலு வைக்கப்பட்டிருந்தது. ஏராளமான பொம்மைகள். முதல் தட்டின் இரு ஓரங்களிலும் நான் டெல்லி போயிருந்த போது ஆசையோடு வாங்கி வந்திருந்த காகம் பொம்மைகள். என் பையன் படு விஷமம். அக்கம் பக்கத்தினர் வரவும் தட்டில் சுண்டல் தொன்னைகளைக் கொண்டு வந்து வைத்தேன். பாடிக் கொண்டிருந்த சமயம் திடீரென்று என் பையனைக் கவனித்த போது அதிர்ச்சி அடைந்தேன். அவன் கைக்கு ஒன்றாக இரண்டு காகங்களையும் எடுத்து வைத்துக் கொண்டிருந்தான். பாடுவதை நிறுத்தி, காக்கா உன் கையைக் கொத்தி விடும். வைத்து விடு!'' என்று சொன்ன போது, அவன் ஒரு ஸ்கட் விட்டான். ''இல்லேம்மா. காக்கா சுண்டலைக் கொத்தித் தின்று விடுமே. அதனால்தான் அதன்



வாயைக்கையால் பொத்திக் கொண்டு இருக்கிறேன்'' என்று அவன் கூறவும் அறையில் இருந்த அனைவரும் ''கொல்லென்று'' சிரித்து விட்டார்கள்.

- இரா. ராமலட்சுமி, திருநெல்வேலி.

தீபாராதனை காட்டிய பின் அடுத்த வீட்டுக் குழந்தைகள், உறவினர் பெண் அனைவரும் தங்களுக்குத் தெரிந்த பஜனைகளையும், தெய்வப் பாடல்களையும் பாடி

## அடுத்த இதழில்....

## ●● ஸ்போர்ட்ஸ் கருவிகள் : உலகத் தரத்திற்கு உள்நாட்டிலேயே!

**- கவர் ஸ்டோரி**

னர். அப்போது என் அத்தை தாமும் பாடுவதாகக் கூறி உச்சஸ்தாயியில் தம் 'வெண்கலக்' குரலில் ஒரு சினிமாப் பாடலைப் பாடி அனைவரையும் நோகடித்து விட்டார். அனைவருக்கும் சுண்டல் வழங்கப்பட்டது. அப்போது அத்தை ''சுண்டலில் உப்பு ஜாஸ்தியாகி விட்டது'' என்று உரத்த குரலில் குறை கூற அருகிலிருந்த என் தம்பி, ''அத்தை! சுண்டல் நீங்கள் பாடிய பாட்டைக் கேட்டதால் அழுதிடுச்சு, அதனால்தான் உப்பு'' என்று கூற எல்லாருக்கும் ''திக்'' என்றாகி விட்டது. ஆனால் அத்தை நையாண்டியை ரசித்துச் சிரிக்கவும் எல்லோரும் அவருடன் சேர்ந்து கொண்டனர் சிரிப்பில்.

- வி. சுரேஷ், கோவை.

**என்** அம்மா தந்த பொம்மைகள் நாளடைவில் ஒவ்வொன்றாய் உடைந்து போய்க் கடைசியாக ஒரு செட்டியார் பொம்மை மட்டும் மிஞ்சியது. அதுவும் ரொம்பப் பழைய பொம்மையானதால் கறுப்பாக இருக்கும். என் கணவரும், குழந்தைகளும் அந்தப் பொம்மையைத் தூக்கிப் போட்டு விடக் கூறியும் மனம் வரவில்லை. அம்மா நினைவும், நானும் சகோதரிகளும் சிறு வயதில் நவராத்திரி சமயம் எவ்வளவு குதூகலமாய் இருந்தோம் என்பதும் அதைப் பார்க்கும் போது ஞாபகம் வரும். கொலுவிற்கு வந்த என் சிநேகிதி ''இது என்ன? இந்தச் செட்டியார் இப்படிக் கன்னங்கரேல் என்று இருக்கிறாரே'' என்ற சிரித்தபடி கேட்டாள். நான் உடனே சமயோசிதமாய் ''பாவம், அந்தச் செட்டியார் கரி வியாபாரம் செய்து இப்படியாகி விட்டார்'' என்றேன். உடனே என் சிநேகிதி பக்கத்தில் இருந்த புதிய பளபளப்பான பொம்மையைச் சுட்டி, செட்டியார் மனைவி என்ன ப்ளீச்சிங் பௌடர் வியாபாரமா?'' என்று கேட்டதும் சிரிப்புத் தாங்க முடியவில்லை.

- ஜானகி ரங்கனாதன், சென்னை - 47.

**தி**ருமணமான ஆண்டு. முதல் நவ ராத்திரி. என் மனைவி, கொலு அமைத்தாள். என் தங்கைக்குக் கொஞ்சம் வாய் நீளம். காந்திஜி போற்றிய மூன்று குரங்கு பொம்மைகளைக் காட்டி, ''மன்னி, இதோ பார் உங்க சொந்தக்காரங்கள்ளாம்..!'' என்று கேலி பேசினாள்.

அதற்கு என் மனைவி, ''ஆமாம்! எனக்குக் கல்யாணமாகி பத்து மாசம் ஆகு இல்ல... இவங்கள்ளாம் பத்து மாசமா என்னோட புகுந்த வீட்டுச் சொந்தக்காரங்க தான்!'' என்றாள்.

எல்லோரும் சிரிக்கும் போது அந்தக் குரங்கு பொம்மைகளும் சேர்ந்து சிரித்தது போலிருந்தது.

- அ. மணிவாசகன், சேலம் - 3.

**என்**னுடைய பெண் ஆறாவது படிக்கத் துவங்கிய போது, எனக்கு வீட்டில் கொலு வைக்கும் ஆசை எழுந்தது. அதை என் கணவரிடம் கூறிய போது வேண்டாம் எனக் கூறி விட்டார்!

மகளுக்கும் எனக்கும் ரொம்ப ஏமாற்றம். நவராத்திரிக்கு முதல் நாள்... இரு கிழவிகள் ஒரு கூடை நிறையப் பொம்மைகளைச் சுமந்து கொண்டு விற்பனைக்குக் கூவியபடி செல்வதைக் கண்ட போது, ஏக்கம் அதிகரித்தது. அப்போது என் கணவரும் ஏதோ வேலையாகச் சைக்கிளை எடுத்துக் கொண்டு புறப்பட்டார். கால் மணி நேரம் கழித்து... வாசலில் அவரும் பொம்மை விற்ற கிழவிகளும் வந்து நிற்கக் கண்டு ஒரே ஆச்சர்யம்.

''ஆபீஸ் வேலையைப் பற்றி யோசித்தபடியே சென்று கொண்டிருந்தேன். இவர்கள் அருகில் நெருங்கிய போது, ப்ரேக் சரியாப் பிடிக்கலை... ஒரு கிழவி மீது மோதினேன். அந்தக் கிழவி மற்றொரு கிழவி மீது சரிய... இருவர் கூடைகளும் சரிந்து கீழே விழுந்து சில பொம்மைகள் உடைந்து விட்டன. கூச்சல் போட ஆரம்பித்து விட்டனர்.

'' உடைந்தது... உடையாதது என எல்லாவற்றையும் நானே வாங்கிக் கொள்கிறேன் என்று சமாதானப்படுத்தி அழைத்து வந்தேன்...'' - என முடித்தார் என் கணவர்.

அதிர்ஷ்டவசமாக, பொம்மைகளில் முக்கால்வாசி உடையாமல் நன்றாக இருந்தன.

இப்படியாகத் தொடங்கிய எங்கள் வீட்டு கொலு ஆண்டு தோறும் தொடர்கிறது.

- திருமதி. ராஜேஸ்வரி, திருச்சி - 14.

# துவக்கப் பள்ளிகள்:

# அரசு ஆணை — ஆண்களுக்கு அநீதியா?

சமீபத்தில் தமிழக முதல்வர் செய்துள்ள ஓர் அறிவிப்பின்படி, தொடக்கப் பள்ளிகளில் ஆண் ஆசிரியர்களுக்குப் பதிலாக, முழுக்க முழுக்கப் பெண் ஆசிரியைகளே நியமிக்கப்படவிருக்கிறார்கள். தமிழக அரசின் இந்த முடிவு சரியானதா? இது எத்தகைய விளைவுகளை ஏற்படுத்தும்?

''வரவேற்கத்தக்க ஒரு முடிவு'' என்று கூறுகிறார் சென்னை தி. நகர் ஷ்ரைன் வேளாங்கண்ணி பள்ளியின் செயலாளரான திருமதி. பிள்ளை. ''பெரும்பாலும், எல்லாத் தனியார் பள்ளிக்கூடங்களிலுமே தொடக்க நிலை வகுப்புகளுக்குப் பெண் ஆசிரியைகளையே நியமிக்கிறார்கள். அரசாங்கமும், இப்படி ஒரு முடிவு எடுத்திருப்பது நல்ல விஷயம்'' என்று கூறுகிறார் அவர்.

''ஆண்களை விட பெண்களுக்குப் பொறுமை அதிகம். ஆசிரியத் தொழிலுக்கும் இது பொருந்தும். சிறு வயதில் குழந்தைகள் - குறிப்பாக கே. ஜி. வகுப்புகளில் இருக்கும் குழந்தைகள் - எல்லாமே சமமான கிரகிப்பு சக்தி, புரிந்து கொள்ளும் சக்தி பெற்றிருப்பார்கள் என்று கூற முடியாது. கொஞ்சம் மந்தமான குழந்தைகளுக்கு, ஒன்றிரண்டு தடவை மட்டும் சொன்னால் புரிந்து கொள்ள முடியாது. திரும்பத் திரும்பச் சொல்லித் தர வேண்டும். கேள்வி கேட்டால் பதில் சொல்லத் தெரியாமல் முழிக்கும் போது, பொறுமை இழந்து, அவர்களை அடிக்கவோ, திட்டவோ கூடாது. ஆண்களால் அது சாத்தியமில்லை என்பது என் பல வருட அனுபவத்தில் நான் கண்ட உண்மை. ஆனால் பெண்கள் இந்த விஷயத்தில் ஆண்களுக்கு நேர் எதிர்'' என்று விளக்கம் தருகிறார் அவர்.

இதற்கு மறுப்புத் தெரிவிக்கும் வீ. கணபதி என்ன சொல்கிறார்?

''மாதா, பிதா, குரு என்பதில் குரு என்பது ஆசிரியனைத்தான் குறிக்கிறது. பெண்ணை அல்ல. வெறும் ஏட்டுக் கல்வி மட்டுமின்றி, வேதங்கள், வீர வித்தைகள் என பலவற்றைக் கற்றுக் கொடுத்தவர் குரு. கழுதை தேய்ந்து கட்டெறும்பு ஆன கதையாகி விட்டது இன்றைய கல்வி முறை. கட்டெறும்பு தேய்ந்து சிற்றெறும்பு ஆகியது போல உள்ளது, ஆரம்ப நிலையில் பெண்களை மட்டுமே ஆசிரியர்களாய் நியமிப்பது என்பது!'' என்கிறார். சுமார் முப்பதாண்டு காலம் துவக்கப் பள்ளி ஆசிரியராகப் பணி புரிந்து ஓய்வு பெற்றவர் வீ. கணபதி.

''வேலை வாய்ப்பு என்ற கண்ணோட்டத்தில் இந்த அறிவிப்பை நோக்கினால், இது ஆண்களுக்கு இழைக்கப்பட்டுள்ள ஓர் அநீதி என்று நிச்சயம் சொல்லலாம். கிராமப்புற இளைஞர்களுக்குப் பள்ளியாசிரியர் தொழில் வேலை வாய்ப்புக்கு ஒரு தீர்வாக இருக்கிறது. இப்போது, பெண்களையே ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் நியமிக்க ஆரம்பித்தால், கிராமத்து இளைஞர்களுக்கு உள்ளூரில் இருக்கும் வேலை வாய்ப்பு பறிபோய், அவர்கள் வேலை இன்றி இருக்க நேரிடும்; இல்லையெனில், அவர்களும் வேலை தேடி நகரங்களுக்குப் போக வேண்டும். இன்றைய இளைஞர்களுக்குப் புதிய வேலை வாய்ப்புக்களை ஏற்படுத்த உருப்படியாக எதுவும் செய்யாமல், இருக்கிற வாய்ப்புக்களையும் தட்டிப் பறிப்பது எந்தவிதத்தில் நியாயம்?'' என்று கேட்கிறார் வீ. கணபதி.

☛ ராஜு



☛ ஈஸ்வரன்



"இப்போது, குழந்தைகளின் அம்மாக்கள்தான் பெரும்பாலும் பள்ளிக்குக் குழந்தைகளை அழைத்துச் செல்வது, திரும்ப அழைத்துக் கொண்டு வருவது, சாப்பாடு தருவது போன்ற பணிகளைச் செய்கிறார்கள். தங்கள் குழந்தைகளின் படிப்பு நிலவரங்களை வகுப்பு ஆசிரியருடன் பேசிக் கேட்டறிந்து கொள்வது அம்மாக்கள்தான். ஆண்களை விடப் பெண்களை வகுப்பாசிரியர்களாய் நியமித்தால் அம்மாக்கள் தயக்கமின்றிப் பேசி, தங்கள் குழந்தைகளின் முன்னேற்றத்தைக் கண்டறிய முடியுமல்லவா?'' என்கிறார் திருமதி. அமுதா பரந்தாமன்.

இவர் இப்படிச் சொன்னாலும் ''எதையும் பிராக்டிகலாய்ப் பார்க்க வேண்டும்'' என்கிறார் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் பணிபுரியும் பெயர் கூற விரும்பாத ஒரு



☛ திருமதி பிள்ளை



☛ அமுதா பரந்தாமன்

பெண்மணி. ''ஆசிரியர் பணி புனிதமானது; சமூக நோக்கம் கொண்டது என்பதெல்லாம் பழங்கதை. இன்றைக்கு மற்றெந்தச் சம்பளம் பெறும் உத்தியோகம் போலத்தான் ஆசிரியப் பணியும் கருதப்படுகிறது. கடமைக்கு பள்ளிக்கூடத்துக்கு வந்து போகிறார்கள். தொழில் அக்கறை, பக்தி இவை அற்றுப் போய் விட்டன. இப்படியிருக்கிற நிலைமையை மாற்ற முயற்சி மேற்கொள்ளாமல் பெண்களுக்குப் பொறுமை அதிகம்; அக்கறை அதிகம் காட்டுவார்கள் என்றெல்லாம் கூறுவது, நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளும் விஷயங்கள்தான்'' என்கிறார் இவர். ''பார்க்கப் போனால் பெரும்பாலான ஆண்களுக்கு வகுப்பக் கவலை மட்டும்தான்; பெண்களுக்கோ, வீட்டுக் கவலை, பள்ளி வகுப்புக் கவலை இரண்டும் உண்டு. அதனால் அவர்களிடம் அதிக பரபரப்பு காணப்படலாம்.''



☛ கி. வேங்கடசுப்பிரமணியம்

"இது நடைமுறை சாத்தியமில்லாத ஒரு திட்டம்'' என்கிறார் தமிழ்நாடு ஆசிரியர் கூட்டணி இயக்கத்தின் 'ஆசிரியர் பேரணி' இதழின் பொறுப்பாளரான ராஜபாலு. பணி ஓய்வு, மரணம் மற்றும் புதிதாய் உருவாக்கப்படும் வேலை வாய்ப்பு இவை மூலம் ஆண்டுக்கு அதிகபட்சமாய் இரண்டாயிரம் பேருக்குப் புதிதாக வேலை வாய்ப்புத் தர இயலும். இனி முழுக்க முழுக்கப் பெண்களையே நியமிப்பது என்று முடிவு செய்தாலும் கூட, துவக்கப் பள்ளி நிலையில் நூறு சதவிதம் பெண் ஆசிரியைகள் என்ற நிலைமை ஏற்பட சுமார் நாற்பது அல்லது ஐம்பது ஆண்டுகள் ஆகும். அதற்குள் என்னென்ன அரசியல் மாற்றங்கள் நிகழுமோ? யார் கண்டது?

''இவற்றோடு நம் மாநிலத்தில் ஆயிரத்துக்கும் அதிகமான ஓராசிரியர், இரண்டாசிரியர் பள்ளிகள் உள்ளன. இவற்றிலும் பெண்களையே நியமிப்பதாய் வைத்துக் கொள்வோம். அப்போது அந்த ஒரே பெண் ஆசிரியையோ, ஈராசிரியர் பள்ளியில் இருவரும் ஏக காலத்திலோ மகப்பேறு விடுப்பில் செல்ல நேரிட்டால் பள்ளிக்கூடத்தின் கதி என்னவாகும்? யோசித்துப் பாருங்கள்'' என்கிறார் இவர்.

தமிழ்நாடு தொடக்கப் பள்ளி ஆசிரியர் கூட்டணியின் தலைவர் ஜே. எஸ். இராகு, பொதுச் செயலாளர் ஈசுவரன் ஆகியோர், மனவியல் ரீதியில் இத் திட்டத்தை வரவேற்கிறார்கள். அதே சமயம் ராஜபாலுவைப் போலவே நடைமுறைச் சிக்கல்களைச் சுட்டிக்காட்டுகிறார்கள். ''பெண்கள் சென்று வர முடியாத மலைப் பகுதிகளில் உள்ள பள்ளிகளில் என்ன செய்வது? பஸ்ஸை விட்டு இறங்கி இரண்டு மூன்று மைல் நடந்து செல்ல வேண்டிய இடங்களில் உள்ள பள்ளிகளில் பெண்களைப் போட்டால் தினசரி அத்தனை தூரம் நடந்து சென்று வருவது சிரமமில்லையா?'' என்று

கேட்கிறார்கள்.

இத்தனை விதமான கருத்துக்களையும் கேட்டறிந்து கொண்டு, டாக்டர். கி. வேங்கடசுப்ரமணியத்தைச் சந்தித்தோம். தொடக்கக் கல்வி இயக்குனர் பொறுப்பு முதல், பல்கலைக் கழக துணைவேந்தர் பதவி வரை வகித்த அந்த அனுபவசாலியிடம் கருத்துக் கேட்ட போது கூறினார் :

''கொள்கை ரீதியில் அருமையான திட்டம்தான். அதே சமயம், ஐந்தாம் வகுப்பு முடிவதற்குள் ஏறத்தாழ பாதிப் பேர் பள்ளியிலிருந்து நின்று விடுகிறார்கள் என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும். போதிய கட்டட வசதி கிடையாது; குடி தண்ணீர் வசதி, கழிப்பறை வசதி கிடையாது. இவையெல்லாம் ஒருபுறம் இருக்க, ஆசிரியர்களுக்கும் போதிய பயிற்சி கிடையாது. நவீன பாடங்களைப் போதிக்கும் முறைகளை ஆசிரியர்களுக்கு நாம் சொல்லித் தருவதில்லை. முதலில் ஆசிரியர் பயிற்சிப் படிப்பின் பாடத் திட்டம் முற்றிலுமாய் மாற்றியமைக்கப்பட வேண்டும். இவற்றையெல்லாம் உடனடியாகச் செய்யாவிட்டால், தொடக்கக் கல்விக்காக அரசு செலவழிக்கும் கோடிக்கணக்கான பணம் விரயமாகிக் கொண்டுதான் இருக்கும். அதைப் பெண் ஆசிரியைகள் நியமனங்களால் தடுத்து நிறுத்தி விட முடியாது.''

பேட்டி : எஸ். சந்திரமௌலி

அட்டை வண்ணப்படம் : யோகா



''உங்க வீட்டு கரண்ட் பில் எவ்வளவு வருதுங்க?''

''கரண்ட் எரியறதால 50 ரூபாயும் கரண்ட் எரியாத போது கம்ப்ளைண்டு பண்றதாலே போன் பில் 50 ரூபாயும் வர்றதுங்க...''

- உஷா எஸ். மூர்த்தி.

''அந்த நடிகை தன்னோட கல்யாணப் பத்திரிகையை புதுமையா அடிச்சிருக்காங்க...''

''எப்படி?''

''டைவர்ஸ் தேதியையும் பத்திரிகையில் போட்டிருக்காங்க!''

- வி. கி. குமார்.



## சுதந்திரம் கிடைக்கும் நேரம்!



விடுதலைப் போராட்டம் நடந்து கொண்டிருந்த காலம். அலகாபாத்தில் காங்கிரஸ் மாநாடு தொடங்கி அரை மணி நேரம் ஆன பிறகு வல்லபபாய் படேல் பரபரப்புடன் ஓடி வந்தார். அவரைக் கண்ட காந்திஜி, ''நமது நாட்டிற்குச் சுதந்திரம் வருவதற்கு அரை மணி நேரம் தாமதமானால், அதற்கு வல்லபபாய் பட்டேல்தான் காரணம்'' என்று சிரித்துக் கொண்டே கூறினார்.

உடனே வல்லபபாய், ''மாநாடுகளுக்கு நான் வரும் நேரத்தைப் பொறுத்துத்தான் நமது நாட்டிற்குச் சுதந்திரம் கிடைக்கும் என்றால், அடுத்த மாநாடு முதல் நான் பல மணி நேரம் முன்னதாகவே வந்து விடுகிறேன்'' என்றார். அனைவரும் சிரித்தார்கள் காந்திஜி உள்பட.

'சிரிக்க சிந்திக்க மேதைகளின் நகைச்சுவை' நூலி விருந்து...

- நல்லாலம் காசிதாசன்.

# ஐசோ பயிற்சி, நைசான பயிற்சி!

"வாக்கிங் போக ஷூ ரொம்ப செலவு"; "தண்டால் பஸ்கியா? அம்மாடி யோவ்! யாரால் முடியும்?"; "டென்னிஸ், கோல்ஃப் - எல்லாம் பணக்காரர் சமாசாரம்"; "யோகாசனமா? யாருக்கு நேரம் இருக்கு?"

நழுவுகிறவர்களே ரொம்ப அதிகம்.

"விடாதீர்கள்! இவர்களையும் இழுத்துப் போட ஐசோ மெட்ரிக் பயிற்சி இருக்கு" என்கிறார் டாக்டர். "ஐசோ டானிக்கும் உண்டு!"

"அப்படியென்றால்?"

விளக்குகிறார் டாக்டர் ராஜா வேங்கட கிருஷ்ணன் :

"தசைகளை உறுதிப்படுத்திக்கொள்ள உதவுவது ஐசோமெட்ரிக். ஆர்த்தரைடிஸ் வராமல் தடுக்கவும், வந்திருந்தால் அது மோசமாகிப் படாத பாடு படுத்துவதைத் தவிர்க்கவும் இந்தப் பயிற்சியைச் செய்யலாம். ஐசோ டானிக் எக்சர்சைஸ் கை, கால்களை நீட்டி, மடக்கிச் செய்வது. வாயுப் பிடிப்பு உள்ளவர்களும், எலும்பு முறிவுக்குப்பின் மாவுக்கட்டுப் போட்டவர்களும், ஆர்த்ரைடிஸ் நோய் உள்ளவர்களும் செய்வது. நோய் வந்தபின் செய்வதை விட நோய் வராமல் தடுக்க இந்தப் பயிற்சிகளைச் செய்வது புத்திசாலித்தனம்.

தொடைத் தசை வழியாக, முழங்கால் எலும்புக்கு வந்து, கீழே கால் எலும்புக்குப் போகிற பாரத்தை, முழங்கால் மூட்டில் பாரம் அதிகமாகத் தாக்காமல் இருக்கஐசோமெட்ரிக் பயிற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன.

"எப்போதிலிருந்து இந்த எக்சர் சைஸ்கள் செய்யலாம்?"

"முப்பது வயதிலிருந்து."

"சரி, ஐசோமெட்ரிக் எக்சர்சைஸில் முக்கியமான அம்சம் எது?"

"ஜாயின்ட்ஸ் (இணைப்புக்கள்) அசைவதில்லை அல்லது அசைக்கப்படுவதில்லை. அதனால் மேற்கொண்டு மூட்டுக்கள் பாதிக்கப்படுவதில்லை."

"எப்போது செய்வது? காலை? மாலை?"

"இந்த எக்சர்சைஸ் எல்லாம், சாப்பாட்டுக்கு முன்னால்தான் செய்ய வேண்டும். பிறகு அல்ல."

டாக்டர், பயிற்சிகளை எப்படிச் செய்வது என்று மூக்குக்கண்ணாடி அணிந்த இளைஞர் ரமேஷுக்கு இங்கே விளக்குகிறார்:


படம் : 2


படம் : 1

படம் : 3





படம் : 4



படம் : 5

படம் 1 : புடைத்துக் கொண்டிருக்கும் புஜத்தின் தசைகள். இது ஐசோ-மெட்ரிக். எதிர்ப்புச் சக்திக்காக டாக்டர் கையைப் பற்றியுள்ளார். உதவிக்கு ஆள் இல்லையெனில் ஜன்னல் கம்பி, நாற்காலி விளிம்பு போன்ற எதையேனும் பயன் படுத்தலாம்.

படம் 2 : முழங்கால் மூட்டுக் களை அசைக்க - 50 தடவை உட்கார்ந்து எழவும். இது ஐசோடானிக்.

படம் 3 : ரிலாக்ஸ்டாக நில்லுங்கள் - ஐசோ டானிக்தான் இதுவும்.

படம் 4 : காலை மெல்ல உயர்த்துங்கள் - எதிர்ப்புச் சக்திக்காக டாக்டர் பிடித் திருக்கிறார் - ஜாயின்ட் அசைவதில்லை. ஐசோமெட்ரிக் வகை இது. கால்களை மாற்றி மாற்றி 50 முறை உயர்த்தித் தாழ்த் துங்கள். எதிர்ப்புச் சக்திக்கு எல்லாச் சம யத்திலும் டாக்டர் கிட்டே பிடித்துக் கொண்டு நிற்கமாட்டார். அதனால் சுவர் அல்லது கதவு உதவியை நாடவும்!

படம் 5 : கழுத்துக்குப் பயிற்சி தூக்கினால் ஐசோ டானிக்.

படம் 6 : முகத்தைக் கீழே தாழ்த்தினால் - ஐசோமெட்ரிக்.



படம் : 6

கழுத்தை மேலும் கீழும் அசைத்துப் பயிற்சி செய்யும் போது, யாரும் உங்களிடம் எதுவும் கேட்கிற மாதிரி பக்கத்தில் இல்லாம லிருந்தால் நல்லது. இல்லை என்றால் நீங்கள் அவர் கேட்பதற்கு ''ஆமாம்'' போடு வது மாதிரி இருக்கும்!

- சாருகேசி

புகைப்படங்கள் : யோகா

# அன்புள்ள அம்மு...

**அ**ன்புள்ள அம்மு என்கிற அருள்மொழி மங்கைக்கு,
அக்காளின் நவராத்திரி ஆசிகள்!

உன் புலம்பல் மடல் கிடைத்தது. நம் அப்பா அம்மா உனக்குப் புலம்பல் மொழி மங்கை என்று பெயர் வைத்திருந்தால் பொருத்தமாயிருந்திருக்கும்!

அம்மு! சின்ன வயதில் அப்பா, அம்மா சொன்ன நவராத்திரி நாயகி கதையை மறந்து விட்டாயே! மஹிஷாசுரனை வதம் செய்ய, துர்க்கை, லக்ஷ்மி, சரஸ்வதி தேவிகள் சக்தி ஸ்வரூபமாக ஒருங்கிணைந்து அவதரித்து ஒன்பது நாட்கள் போராடினார்கள். பத்தாம் நாள் மஹிஷன் வீழ்ந்தான். தேவர்களும் தெய்வங்களும் முயன்று தோற்ற காரியத்தை சக்தி ஸ்வரூபிணி சாதித்தாள். இது பெண்மைக்குக் கிடைத்த வெற்றியல்லவா? இப்படியிருக்க, பெண்ணாய்ப் பிறந்த நீ 'வெற்றிலை பாக்கு, சுண்டல் சமாசாரத்தால் வேலை வளர்கிறது' என்று இந்தப் புலம்பல் புலம்புவது வேடிக்கை! பலமும், தனமும், புத்தியும் தனித்தனியே இருந்தால் சாதிக்க முடியாததை ஒருங்கிணைந்து ஒத்துழைத்தால் சாதித்து விடலாம் என்பதையே மகிஷாசுரமர்த்தினி உணர்த்துகிறாள். இதைப் பெண்களாகிய நாம் புரிந்து கொண்டால் எவ்வளவோ முன்னேறலாம். ஆனால் தேவியே பத்து நாள் போராட்டத்துக்குப் பிறகுதான் வெற்றி கண்டாள் என்பதையும் மறக்கக் கூடாது! பொறுமையோடு பாடுபட வேண்டும்.

நறநறவென்று நீ பல்லைக் கடிப்பது இங்கே ஸ்ரீரங்கப்பட்டினம் வரை கேட்பதால் இத்துடன் உபதேசத்தை நிறுத்துகிறேன்.

'**சமையல் புக்'**இல் இல்லாத ஒரு புது சுண்டல் 'ரெசிபி' சொல்லட்டுமா...? ரொம்ப ரொம்ப ஈஸி....

பச்சைப் பயறு - (உன் மாமன் செல்லமாகக் கொள்ளு என்று அழைக்கும் முழுப் பச்சைப் பயறுதான்....!) இதை முதல் நாள் இரவு தண்ணீரில் ஊறப் போட்டு விட்டு, காலை எழுந்ததும் களைந்து, வடித்து, ஒரு தாம்பாளத்தில் பரவலாகக் கொட்டி மூடி வை. நீ சாயந்திரம் ஆபீஸிலிருந்து வரும் வேளைக்கு இந்தப் பச்சைப் பயல்களுக்குச் சின்னச் சின்னதாக வெள்ளை மீசை முளைத்திருக்கும்!

கொஞ்சம் கடுகு, காய்ந்த மிளகாய், பெருங்காயம் தாளித்து, முளைத்த பயறை அதில் கொட்டிக் கொஞ்சமாக உப்புப் போட்டு, ஒரே ஒரு கிளறுக் கிளறி இறக்கி வை. ரொம்பச் சோம்பலாக இல்லாவிட்டால் கொஞ்சம் தேங்காயைத் துருவி அதன் தலையில் போடு. மறக்காமல் நைவேத்தியம் செய்து விட்டு வாயில் போட்டுப் பார்!

'பரவாயில்லையே, கொள்ளு கூட அலமேலுமங்காளுக்குப் பயப்படுகிறதே!' என்று சர்டிபிகேட் கொடுத்தபடி உன் மாமன் ருசித்துச் சாப்பிட்ட சுண்டல் இது!

பண்ணிப் பார்த்து விட்டு எப்படியிருந்தது என்று எழுது... ரொம்ப 'டயர்டாக' இருக்கும் நாட்களில் வெற்றிலை பாக்கு, பழம் மட்டும் நைவேத்தியம் செய்து விட்டு, சுண்டலுக்காக வரும் வாண்டுகளின் கையில் ஒரு சாக்லேட் கூட கொடுத்தனுப்பலாம். அம்பாள் நிச்சயமாகக் கோபித்துக் கொள்ள மாட்டாள்!

இப்படிக்கு,
உன் பிரியமுள்ள அக்காள்
அலமேலு மங்கை.

பி.கு.: நவராத்திரிக்குப் புதுப் புடைவை உண்டா? என்ன கலர்...?

– அலமு




மக்களிடம் செல்வாக்கு
தலைகீழா மரம் ஏறுறது கின்னஸ் சாதனையா வேணா இருக்கலாம், அரசியலுக்கு ஒத்து வராது...!


பாகிஸ்தான், பயங்கரவாதிகளை பயிற்சி கொடுத்து அனுப்புது... சும்மா விட மாட்டோம்,
வாலாட்டுறது...
ஒட்ட நறுக்கிடுவோம்!


காந்தி ஜெயந்தி-நூற்பு யக்ஞம்
என்னாங்க இது? நூல் நூக்கணும்னு பார்த்தா, கயிறு திரிச்சிகிட்டு இருக்கே...!
எல்லாம் பழக்க தோஷந்தான்!

## பாதிக் கிணறு தாண்டுவது பேராபத்து!

'என்னடாது, பிரமாதமான பட்ஜெட் போட்டும் விலைவாசிகள் ஏறுமுகமாக இருக்கே?' என்று மத்திய நிதி அமைச்சர் கவலையோடு தாடியைத் தடவுகிறார். காங்கிரஸ் தேர்தல் அறிக்கையில் உறுதி கூறப்பட்டது போல், விலைவாசி குறையாவிட்டாலும் ஸ்திரப்பட்டிருந்தாலாவது பாரதக் குடிமகன் மகிழ்ந்திருப்பான். நடக்கவில்லை. காரணம் என்ன?

தொழில் கொள்கையில் செய்யப்பட்ட புரட்சிகரமான மாற்றங்கள் போல பொருளாதாரக் கொள்கையில் புதிய சிந்தனை இல்லாததுதான்.

'பர்மிட் - லைசென்ஸ் - கோட்டா முறைதான் நமது தேசத்தின் முன்னேற்றத்தை நத்தை வேகத்தில் ஊர்ந்து செல்ல வைக்கிறது; லஞ்ச ஊழலை எல்லா நிலைகளிலும் வளர்ப்பதும் இதுதான்' என்று உணர்ந்து, இதை ஒழிக்கப் போராடவே சுதந்திரா கட்சியைத் தோற்றுவித்தார், ராஜாஜி. இவ்வளவு காலம் சென்று இன்றைய காங்கிரஸ் அரசு, ராஜாஜியின் சுதந்திரத் தொழில் கொள்கையை ஏற்றுச் செயல்படுகிறது. போட்டா போட்டி உருவாகவும், தரமான பொருள்கள் கிடைக்கவும், உற்பத்தி பெருகவும், விலை குறையவும் இது உதவ வேண்டும். ஆனால் இவ்வாறு நிகழ, ராஜாஜியின் தொழில் கொள்கையை ஏற்றது போல், ராஜாஜியின் பொருளாதாரக் கொள்கையையும் அரசு ஏற்க வேண்டும். பாதிக் கிணறு தாண்டுவது ஆபத்து!

முதலாவது மறைமுக, நேர்முக வரிகளைக் கணிசமாகக் குறைக்க வேண்டும். அபரிமித வரிகள், வரி ஏய்ப்புக்கே வழி வகுக்கும். குறைந்தபட்ச வரி விதிப்பு எனில், குறைந்த வருவாய் உள்ளவர்களும் வரி செலுத்தி, நாட்டு முன்னேற்றத்துக்கு உதவிய திருப்தி அடைவார்கள். மொத்தத்தில் அரசுக்கு வருவாய் கூடலாமேயன்றிக் குறையாது. கறுப்புப் பணம் பெருகுவதற்குப் பதில், முதலீடு அதிகரிக்கும். இவை யெல்லாம் சேர்ந்து விலைவாசி குறையவும் தேசம் வேகமாக முன்னேறவும் வழிவகுக்கும்.

இரண்டாவதாக, ரூபாயின் மதிப்பு குறையாமல் அரசு கவனித்துக் கொள்ள வேண்டும். இதற்கு, பற்றாக்குறை பட்ஜெட் பரம எதிரி. ஒரு ரூபாய்தான் என்றாலும் உபரி பட்ஜெட் போட வேண்டும். வரவுக்கேற்ற செலவு. உற்பத்திக்கு உதவாத செலவுகளில் வெட்டு. இன்று அரசு வருவாயில் பெரும்பகுதி ஊழியர்களுக்குச் சம்பளம் தரவே போய் விடுகிறது. ஊழியர்கள் தேவைக்கு அதிகமாக உள்ளனர். ஐந்து ஆண்டுகளுக்கு வேலைக்கு ஆள் எடுப்பதில்லை என்ற கொள்கையைக் கடைப்பிடித்தால், ஓய்வு பெறுகிறவர் ஒவ்வோர் ஆண்டும் விடைபெற, வேலைக்கு ஏற்ற ஊழியர் படை இருக்கும்.

இதனால் வேலையில்லாத் திண்டாட்டம் பெருக விடாதபடிக்குப் புதிய புதிய தொழிலகங்கள் தனியார் துறையில் உருவாக ஊக்குவிக்க வேண்டும். இதற்கு ஏற்ப அடிப்படைத் தேவைகளை மட்டும் அரசு கவனித்தால் அந்த இனங்களிலும் வேலை வாய்ப்புக்கள் பெருகும். மின் உற்பத்தி, சாலைகள் மேம்பாடு, நீர்ப்பாசனம் முதலியன இதில் அடங்கும். தனியார் துறையிலும் தானியங்கு கருவிகளைத் தவிர்த்து, வேலை வாய்ப்பைப் பெருக்கும் முறையில் இயங்கும் நிறுவனங்களுக்கு அரசு கூடுதல் சலுகை காட்டலாம்.

உடல் உழைப்பின் உயர்வை உணர்த்தவும், குடும்பக் கட்டுப்பாடு, தேசிய ஒருமைப்பாடு, சுற்றுச் சூழல் பாதுகாப்பு, சுகாதாரம், ஜாதி-மத வேற்றுமைகளை ஒழிப்பது போன்றவற்றின் முக்கியத்துவத்தைக் கற்றுத் தரவும் ஏற்ற விதத்தில் கல்வித் திட்டத்தை மேம்படுத்த வேண்டும்.

அரசுத் துறை நிறுவனங்கள் லாபகரமாக இயங்கக் காலக்கெடு நிர்ணயித்து, முன்னேற்றமில்லையெனில் தனியார் வசம் ஒப்படைக்க வேண்டும்.

மக்களிடம் ஒரு லட்சிய வெறியை ஊக்குவிக்கும் விதமாகத் தலைவர்கள் பேசி, கோஷங்கள் எழுப்பி, தேசத்தை முன்னேற்ற அவர்கள் ஒத்துழைப்பைக் கோர வேண்டும்.

எல்லாவற்றையும் விட முக்கியமானது, நல்ல கொள்கைகளையும் திட்டத்தையும் வகுத்து, அதில் உறுதியாக நிற்க வேண்டும்! 1985 முதல் இன்று வரை பொருளாதாரச் சட்டங்களைக் கணக்கிட்டால் விடுமுறைகள் நீங்கலாக இரண்டு நாளுக்கு ஒருமுறை மாற்றங்களையோ திருத்தங்களையோ அரசு அறிவித்துள்ளது என்று பால்கிவாலா எடுத்துக் காட்டுகிறார்! இப்படியா, நாட்டை ஆள்வது?



# கல்கி



1991
அக்டோபர் 13
மலர் : 50
இதழ் : 11
பிரஜோத்பத்தி
புரட்டாசி 27

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

# இலவச மின்சாரத்தில் சிக்கனம் எப்படி வரும்?

◆ இந்து மதக் கோவில்களுக்காக முதல்வர் பணம் வசூலிக்கிறார். வசூலிக்கின்ற நோக்கம் தவறல்ல; மதச் சார்பின்மையுள்ள இந்திய நாட்டில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட முதல்வர் வசூலிப்பதுதான் தவறு. இதே நிதியை இந்துமத குரு வசூலித்திருந்தால் வருத்தப்பட்டிருக்க மாட்டோம். முதல்வர் வசூலிப்பதால்தான் வருத்தப்படுகிறோம். முஸ்லீம் ஒருவர் முதல்வராயிருந்து, மசூதிகளுக்காக மட்டும் பணம் வசூல் செய்திருந்தால் மற்றவர்கள் பொறுத்துக் கொள்வார்களா?

திருச்சி - 8, எம். கதிஜா ஹனீபா.

◆ தலையங்கத்தில் 'எல்லா நிலைகளிலுமே கல்வியின் தரத்தையும் போதிக்கும் திறத்தையும் மேம்படுத்த அவசியம் உள்ளது' என்று குறிப்பிட்டிருந்தீர்கள். இக் கருத்து ஏற்புடையதே. துவக்க, நடுநிலைப் பள்ளிகள் அனைத்திற்கும் இடவசதி, தளவாடக் கருவிகள் வசதி போன்ற அடிப்படை வசதிகளை ஏற்படுத்தித் தர வேண்டும். முதல் மூன்று வகுப்புகளில் அனைவருக்கும் தேர்ச்சியளிக்கும் நிலை உள்ளதால் முதல் இரண்டு வகுப்புகளிலாவது கண்டிப்பாக 25 மாணவர்களுக்கு ஓர் ஆசிரியர் என்ற நிலையை ஏற்படுத்த வேண்டும். 90 பிள்ளைகளை ஓர் ஆசிரியர் வைத்துக் கொண்டு அனைவருக்கும் எந்த அளவுக்குச் சிறந்த கல்வித் தரத்தையும் பழக்க வழக்கங்களையும் ஏற்படுத்திக் கொடுத்திட முடியும். ஏனைய வகுப்புகளில் 35 மாணவர்களுக்கு ஓர் ஆசிரியர் என்ற நிலையை ஏற்படுத்த வேண்டும்.

ஸ்ரீமுஷ்ணம், சா. கிருஷ்ணசாமி (ஆசிரியர்)

◆ ''விவசாயிகளுக்கு இலவச மின்சாரம் வழங்கிய வகையில் ஐந்நூற்று நாற்பது கோடி ரூபாய் இழப்பு'' என்று பொதுப் பணித்துறை அமைச்சர் சட்டப் பேரவையில் தகவல் தந்துள்ளார். மின்சாரத்தைச் சிக்கனமாகப் பயன்படுத்த வேண்டும் என்று சொல்லுகிறது அரசு. இலவசம் என்கிற போது விவசாயிகள் சிக்கனத்தைக் கையாளுவது கடினம். ஆகவே விவசாயிகளிடமிருந்து குறைந்த கட்டணமாவது வசூலிக்க வேண்டும்.

திருச்சி - 13, வீ. தேவராசு.

◆ 'நீங்கள் கேட்டவை' பகுதியில் ஒரு வாசகர் 'ப்ரெட்டி வுமன்' என்ற ஆங்கிலப் படத்தின் தழுவல்தான் 'சின்ன தம்பி' என்று கூறியுள்ளதைப் பார்த்து ஆச்சரியம் அடைந்தேன். இவ்விரு படங்களையும் நன்கு பார்த்தவர்களுக்கு ஒன்றுக்கு ஒன்று சம்பந்தம் இல்லை என்பது புரியும்.

திருப்பத்தூர், ஆர். அண்ணாதுரை.

◆ தமிழகத்தில் மாவட்டங்களைப் பிரிப்பதும் அதற்குப் புதிதாய்ப் பெயரிடுவதும் மற்ற மாவட்டங்களுக்கு உள்ள பெயரை மாற்றம் செய்வதுமே மாறி மாறி வரும் அரசுகளின் வாடிக்கையாய் உள்ளது. பெயர் மாற்றத்திலும், மாவட்டப் பிரிப்பிலும் ஏகப்பட்ட தொகை வீண் செலவாவது ஒருபுறமிருக்க, மாவட்டப் பெயர்களை வைத்து (மாவட்டத்) தலைநகரத்தைத் தெரிந்து கொள்ள முடிவதில்லை. இந்த மாவட்டம் எங்கே இருக்கிறது என்ற கேள்வியே இப்போது மக்கள் மத்தியில் ஏற்படுகிறது.

கோடிக்கரை, எஸ். மாணிக்கவாசகம்.

◆ ''ஹிந்து'' பத்திரிகையில் சுய ரத்ததானம் பற்றி நான் எழுதிய கட்டுரையிலிருந்து தகவல் எடுத்துக் கூறிய அ. ஷண்முக சுந்தரம் அவர்களுக்கு, நன்றி. ஆனால் அந்தத் தகவலில் ''இருபது நாள் கழித்து அவருக்கு ஆபரேஷன் செய்யும் பொழுது'' எனக் கூறியது எனது கட்டுரையில் நான் எங்கும் குறிப்பிடாத விஷயம். சாதாரணமாக சுய ரத்ததானம் செய்து 4-8 தினங்களுக்குள் அறுவை சிகிச்சை தருணத்தில் இரத்தத்தை தானம் செய்தவருக்கே மீண்டும் செலுத்தி விடுகின்றனர்.

சென்னை - 18, எம். எஸ். வெங்கடராமன்.

◆ முப்பெரும் விழாவில் ஓர் இளைஞர் வேல் போட்டுக் கொண்டு அலகு குத்தி அந்தரத்தில் தொங்கியவாறே கருணாநிதிக்கு மாலை அணிவித்தார். பக்தர்கள் அலகு குத்தி வேல் போட்டுக் கொண்டு கடவுளைத் துதிக்கின்றனர். தொண்டர்கள் அலகு குத்தி வேல் போட்டுக் கொண்டு தலைவரைத் துதி பாடுகின்றனர். பகுத்தறிவு, சுயமரியாதை என்று மேடைதோறும் முழங்கி வரும் இவர்கள், காலில் விழுந்து வணங்குவது, ஆரத்தி எடுப்பது, பெரியார் ,அண்ணா பிறந்த நாள் அன்று சிலைகளுக்கு மாலை அணிவித்து வணங்குவது வரை சகலத்துக்கும் ஆதரவு தந்து ஊக்குவிப்பது ஏன்?

புதுச்சேரி, இரா. குமார்.

◆ கல்கி 8.9.91 தேதியிட்ட இதழில் முன்னாள் உள்துறை செயலாளர் திரு. நாகராஜன், பற்றிய ஒரு செய்திக் குறிப்பினைப் படித்தேன். அதில் ''சிறிதும் முக்கியத்துவம் இல்லாத அண்ணா மேலாண்மை நிலையத்திற்கு'' என்று குறிப்பிட்டு உள்ளீர்கள். இந்த வார்த்தைகள், அரசாங்க அதிகாரிகளுக்கு செம்மையான சேவை செய்து வரும் நிறுவனத்தின் பேராசிரியர் என்ற முறையில் என்னை மிகவும் வருத்தியது. கடந்த பத்து ஆண்டுகளில் 468 மேலாண்மைப் பயிற்சிகளை இந்த நிறுவனம் நடத்தியுள்ளது. இதன் மூலமாகச் சுமார் பத்தாயிரம் அரசாங்க அலுவலர்கள் மேலாண்மையின் பல துறைகளில் பயிற்சி பெற்றுச் சென்றுள்ளார்கள்.

சென்னை - 28, டி. ஏ. சிவசுப்ரமணியம்.

**(மேற்படி குறிப்பு அரசியல் நோக்கில் பல்வேறு நிறுவனங்கள் பலவிதமாக எடை போடப்படுவதை உணர்த்துமேயன்றி மெய்யாலுமே அண்ணா மேலாண்மை நிறுவனம் பயனற்றது என்ற கருத்தில் எழுதப்பட்டதல்ல. - ஆசிரியர்.)**

◆ 'பர்கூரில் முதல்வர் ஜெயலலிதாவின் தாயார் சந்தியாவின் பெயரில் கூட்டுறவு நூற்பாலை தொடங்கப்படும்' என்ற கைத்தறித் துறை அமைச்சரின் அறிவிப்பு வியப்பையும், வேதனையையும் அளிக்கிறது. அரசுத் தொழிற் சாலைகளுக்கோ, பிறவற்றுக்கோ ஆட்சியாளர்களுடைய அல்லது அவர்களின் உறவினர்களுடைய பெயரைச் சூட்டுவது மிக மிகத் தவறான முன்னுதாரணம் என்பது நன்கு தெரிந்தும் தொடர்ந்து பல அரசுகளும் இதே தவறைச் செய்து வருகின்றன. 'முந்தைய அரசுகள் செய்த தவறுகளைச் சரிப்படுத்துவோம்' என்று கூறிவிட்டு அதே பாதையில் செல்வது 'ஜெ' அரசுக்கு அழகல்ல. தமிழக அரசு தனது முடிவை மாற்றிக் கொண்டால் அதன் மதிப்பு உயரும்.

குடந்தை, கே. பட்டு.




- இவ்வாண்டு தீபாவளி மலர்
உங்களைத் துவாரகைக்கு
அழைத்துச் செல்கிறது....!

இன்றே உங்கள் ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்ளுங்கள்

## சிரிக்க வையுங்கள் ;

## சிங்கப்பூர் செல்லுங்கள் !

காப்பி அடித்த ஜோக்குகள்/துணுக்குகள் என்று புகார் வந்தவை நீக்கப் பட்டன. அதன்பின் கணக்குப் பார்த்ததில் மிக அதிகமான அளவில் எட்டு துணுக்குகள்/ஜோக்குகள் எழுதியவர்:

**பி. ஜி. பி. இசக்கி,**
**சிவசைலம் - 627 412.**

இவர் ராஜ் டிராவல்ஸ் வழங்கும் இரு சிங்கப்பூர் பயண டிக்கெட்டுகளைப் பெறுகிறார். சிங்கப்பூர் சென்று வந்ததும் இவரது பேட்டி கல்கியில் இடம் பெறும்.

## வாசகர் யோசனை :

ரூ. 2500 சிறப்புப் பரிசு பெறுபவர்:
நெல்லைக் குரலோன்,
2/58, வள்ளுவர் வீதி,
பொட்டல்புதூர் - 627 423,
நெல்லை மாவட்டம்.

*பிறரை விட மிக அதிக அளவில் இவரது 15 யோசனைகள் ஏற்கப்பட்டு, கட்டுரை வடிவம் பெற்று, ஓராண்டில் பிரசுரமாகியுள்ளன.*

இவருக்குப் பரிசுத் தொகை தற்போது அனுப்பி வைக்கப்படுகிறது. பொன்விழா ஆண்டின் முடிவில் விழா மேடையில் இவர் கௌரவிக்கப்படுவார்.

(குறிப்பு : வாசகர் யோசனைகள் தொடர்ந்து ஏற்கப்பட்டு, கட்டுரை வடிவம் பெறுகின்றன. ஆனால் சிறப்புப் பரிசுக்கான காலக்கெடு ஆகஸ்டு 91 ஆண்டுமலருடன் முடிவுற்றது.)




# கல்கி பொன்விழா பரிசுத் திட்டம்

# வாசகர் போட்டி முடிவுகள்

## மாணவர் கட்டுரைப் போட்டி :

மிக அதிகமான முதல் பரிசுக் கட்டுரைகளை எழுதி ரூ. 2500 சிறப்புப் பரிசு பெறுபவர் :

வ. செந்தில்குமார்,
த/பெ. ந. வஜ்ரமாணிக்கம்,
11, தாமஸ் இல்லம்,
நீலகண்டன் கோயில் தெரு,
பசும்பொன் நகர், மதுரை - 625003.

மதுரை மருத்துவக் கல்லூரி, இரண்டாம் ஆண்டு மாணவரான இவரது நான்கு கட்டுரைகள் முதற் பரிசு பெற்றன; இரு முறை ஆறுதல் பரிசும் பெற்றார்.

இவருக்கும் தற்போது பரிசுத் தொகை அனுப்பப்படுகிறது. பொன்விழா மேடையில் அடுத்த ஆகஸ்டில் நேரில் அழைத்துக் கௌரவிக்கப்படுவார்.

போட்டியில் பங்கேற்ற வாசகர்கள் அனைவருக்கும் நன்றி; வாழ்த்துக்கள்!

– ஆசிரியர், கல்கி.

# தீபாவளித் திருநாளின் முக்கியத்துவமும், உங்களுக்கு ஒரு வேண்டுகோளும்



வரும் தீபாவளித் திருநாளை வெகு விமரிசையாக கொண்டாட இப்பத்திரிக்கையினை படிக்கும் அன்பு உள்ளங்களுக்கு சிவானந்த ஆசிரமக் குழந்தைகளும் முதியோர்களும் தங்களின் வாழ்த்துக்களை மனமுவந்து தெரிவிக்கிறார்கள். பண்டிகை நாட்களில் நிதி உள்ளவர்கள், தத்தம் நிலைமையினை அனுசரித்து விழாக்களை கொண்டாடுகிறார்கள். இந்த திருநாளில் பல்லாயிரக்கணக்கான இளம் நெஞ்சங்கள், ஆதரவற்றோர், பார்வை இழந்தோர், மனவளர்ச்சி குன்றிய குழந்தைகள், சிறைக்கைதிகள் முதியோர், வசதியில்லாதார் உடல் ஊனமுற்றோர் பண்டிகையை பொருள் இல்லாமல் கொண்டாட இயலாதவராக இருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்களுக்கு தாங்கள் மனமுவந்து பொருளாகவோ, நிதியாகவோ, துணியாகவோ, பட்டாசுகளாகவோ கொடுத்து உதவி செய்து ஆத்ம திருப்தி அடையலாம். எந்த ஒரு பண்டிகையிலும், நம்முடைய பொருளில் சிறிதேனும் பிறருக்கு ஈந்தால், அந்த பண்டிகையின் மகிழ்ச்சியினையும், பிறருக்கு உதவினோம் என்ற ஆத்ம திருப்தியும் கிடைக்கப் பெற்று பேரானந்தம் அடையலாம். தாங்கள் அருகிலுள்ள சேவை ஸ்தாபனத்திற்கு சென்று உங்கள் மகிழ்ச்சியினை பகிர்ந்து கொள்ளுங்கள்.

சிவானந்த ஆசிரமத்தில் உள்ள சுமார் 300 ஆதரவற்ற குழந்தைகளும், இந்த தீபாவளி திருநாளை மகிழ்ச்சியுடன் கொண்டாட பொதுமக்கள் மனமுவந்து உதவுமாறு வேண்டுகிறோம். இதனைப் படிக்கும் தாங்கள் தங்களுடைய காணிக்கையாக ஒவ்வொருவரும் குறைந்த பட்சம் தலா ஒரு ரூபாய் இவ்வறப்பணிக்கு அர்ப்பணம் செய்தால், இத்திருப்பணி தங்கள் ஆசியுடன் பரிபூர்ணமாக நிறைவேறும் என்பதோடு இல்லாமல் இந்நாட்டில் உள்ள அனைத்து ஆதரவற்றோரும் பயன் பெறுவர்.

பொது மக்கள் அளிக்க விரும்பும் நன்கொடை பணம், பொருள் எதுவாக இருந்தாலும், அக்குழந்தைகளின் நலனை முன்னிட்டு ஏற்றுக் கொள்ளப்படும். வருமானவரி விலக்கும் அளிக்கப்படும். பொதுமக்கள் தங்களால் இயன்ற உதவியை பணமாக அல்லது பொருட்களாக,

நிர்வாகி, ''சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்''
நெ. 20, கம்பர் தெரு, கிழக்கு தாம்பரம்,
சென்னை - 600 059.
தொலைபேசி எண்கள் : 401078, 402354
என்ற விலாசத்திற்கு அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

# கம்ப்யூட்டர் கிராமம்



முதலில் டோட்டு தூங்குகிறது என்று அதை எடுத்தான். எடுத்த போதுதான் அதன் மண்டையருகில் ரத்தத்தைக் கவனித்தான். மிச்ச ரத்தம் வாயிலிருந்து மெல்லச் சொட்டியது. டோட்டு இறந்து போயிருந்தது. அதை

அப்போதுதான் உணர்ந்த ப்ரமிளா, கீச்சுக் குரலில் அலறியது கிராமம் முழுவதும் கேட்

டிருக்க வேண்டும்.

பரபரவென்று ஜனங்கள் கூடி வரத் துவங்கி விட்டார்கள்.

''அய்யோ யாரோ பாவிப் பயலுங்க பண்ணிருக்கணும் ஸார்.''

''இந்த நாயி ட்ரங்கு ரோட்டில் வேக மாப் போய்ட்டு இருந்ததைப் பார்த்தே னுங்க...''

''முனீஸ்வரன் மரத்தாண்டை பார்த் தங்க...''

ஷண்பேகர் வந்து கூட்டத்தை விலக்கி,



எட்டிப் பார்த்து, ''மனோஜ், இது ஏதோ விபரீதம். என்ன விபரீதம் என்று கண்டு பிடிக்கு முன் மனைவியைக் கவனி. அவள் மயக்கம் வருவது போல் இருக்கிறாள்...'' என்றான்.

அப்போதுதான் ப்ரமிளாவை கவனித் தான் மனோஜ்.

''என் நாயி, என் டோட்டு... எனக்கு வேணும், எனக்கு வேணும்...'' என்று அவள் தேம்பித் தேம்பி அழுது கொண்டிருந்தாள்.

சின்னக் குழந்தை போல அவளை அறைக்குள் அழைத்துச் சென்று சமாதானப் படுத்த, யாரோ துணியால் நாய் மேல் மூடி னார்கள்.

''செத்த நாயி எப்படி மாடி ஏறி வருமுங்க?'' என்று ஒருத்தர் சந்தேகம் கேட்க, ''செத்துப் போச்சா, உசிரு இருக் குதா பாருங்க...'' என்று யாரோ சொன் னார்கள்.

''அப்படித்தான் ஒருமுறை கன்னுக் குட்டி ஒண்ணு கெடக்கலை? அப்ப தெய்வ குத்தமா?''

''தெய்வ குத்தமா?''

''ஆமாங்க. முனீஸ்வரர் மரத்தை வெட்ட இருந்தாரில்லை... அய்யா, மனோ ஜய்யா... சொல்றதைக் கவனமாக் கேளுங்க... இந்த மரத்தை வெட்டற எண் ணத்தை முதல்ல கை விட்ருங்க. இப்படித் தான் நாயைக் காவு வாங்குவாரு முனீஸ் வரரு. அப்புறம் மனுசங்களையே கேப் பாரு. ஒங்களுக்குத் தெரியாது:''

மனோஜ் கோபத்துடன், ''வாட் நான் சென்ஸ்? முனீஸ்வரருக்கும் நாய்ச்சாவுக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. யாரோ வேணு மின்னுட்டே அதைக் கொன்னிருக்காங்க!'' என்றான்.

''யாருங்க? யாராயிருக்க முடியும்?''

''எல்லாம் அந்தப் பூசாரிதான்.''

அவர்கள் அனைவரும் திடுக்கிட்டு, ''பூசாரியைச் சொல்லாதீங்க. அவரு தினம் மூணுதபா குளிச்சுட்டு திருநீறு அப்பிக்கிட்டு பூசை பண்றவரு. செத்த நாயைத் தொடக் கூட மாட்டாருங்க.''

ஷண்பேகர் ஒரு சோடா கொண்டு வந்து ப்ரமிளாவுக்குக் கொடுத்து, ''ப்ரமிளா டோட்டுவைச் சரியான முறையில் அடக்கம் பண்ணலாம். வேற நாய் ஏற்பாடு பண்ணு கிறேன்'' என்றான்.

''டோட்டுதான் வேணும் எனக்கு.''

''எல்லாரும் போங்கப்பா'' என்று

சுஜாதா

ஷண்பேகர் கொஞ்சம் கூட அருவருப்பின்றி நாயைத் தூக்கி, அதன் செத்த கண்களைப் பார்த்து, அதை நியூஸ் பேப்பரில் சுற்றி, "யாராவது வாங்கப்பா போகலாம். முனி மரத்தின் கிட்டேயே புதைக்கலாம்; நேரா சொர்க்கம் போகும், வாங்கப்பா" என்றான்.

ப்ரமிளா சன்னல் வழியாக எட்டிப் பார்த்து, மறுபடி டோட்டுவைக் கூப்பிட்டாள்.

"போனாப் போவுதுங்க. அதே மாதிரி வேற நாயி, ராஜபாளையம், நடேச பண்டிதர் பண்ணைல கெடைக்குங்க..."

"ராஜபாளையம் இல்லைடா..."

மனோஜ் அவர்களைப் பார்த்தான். எல்லோரும் சேர்ந்து கொண்டு ஒரு தெரிந்த நாடகம் ஆடுவது போலத் தோன்றியது.

"நான்சென்ஸ்."

"அதையே சொல்லிக்கிட்டு இருங்க."

ப்ரமிளா பிரமிப்புடன் எதுவும் சாப்பிடாமல் "பம்பாய்க்குப் போய்டலாம்; வேலை வேண்டாம். அம்மா கூடப் பேசணும். எனக்குத் தூள் பக்கோடா வேணும்" என்று தொடர்பில்லாமல் பேசிக் கொண்டிருந்தாள். மனோஜுக்குக் கவலையாக இருந்தது.

ஷண்பேகர் டோட்டுவை நல்ல புல்வெளியில் புதைத்து, அதனருகில் கல் அமைத்து, பூக்களை அமைத்து, "குட்பை டோட்டு. உன்னை முழுவதும் அறிந்து கொள்வதற்குள் பிரிந்து விட்டோம்" என்று சொல்லி விட்டுத் திரும்பச் சாப்பிடுவதற்கு வருமுன், போலீஸ் நிலையத்துக்குப் போய்ப் புகார் கொடுத்தான்.

"கேள்விப்பட்டேன். நாய் செத்து விட்டதாமே?"

"ஆம்."

"என்ன ஆச்சு?"

"எல்லாருக்குமே தெரியும். தெரிந்து கொண்டு பேசுகிறார்கள்."

"மிஸ்டர் ஷண்பேகர், எனக்கு அதில் எல்லாம் நம்பிக்கை இல்லை. கிராமத்துக்கு நம்பிக்கை இருக்கிறது. மரத்தை வெட்டினால் விபரீதங்கள் நிச்சயம் நிகழும். அதற்கு நான் பொறுப்பல்ல. வேணுமென்றால் ஏ. எஸ். பியுடன் ரேடியோவில் பேசுகிறீர்களா?" என்றார்.

"யோசித்துச் சொல்கிறோம்."

"இடத்தை விட்டுப் போய் விடுவது தான் உசிதம்."

"அவ்வளவு கலபத்தில் விட்டுக் கொடுப்பதாய் இல்லை நாங்கள். ஏ. எஸ்.பி., டி.எஸ்.பி. எல்லாரையும் பார்க்கத் தான் போகிறோம். கலெக்டர் ஆபீசுக்குப் போக வேண்டும். அதற்கு முன் அந்தப் பெண் கலக்கத்தில் இருக்கிறாள். அவளைக் கவனிக்க டாக்டரை அழைத்து வர வேண்டும்."

ஆரம்பாக்கத்திலிருந்த ஓமியோபதி டாக்டர் வந்து பார்த்து, "கலக்கம்தான்; களைப்புத்தான். கொஞ்ச நேரம் தூங்கினால் சரியாகி விடும்" என்று வெள்ளைக் கடுகு போல மாத்திரை கொடுத்தார்.

அவர்கள் போன பிறகு கூட ப்ரமிளா விசித்துக் கொண்டிருந்தாள்.

"ஏதாவது சாப்பிடு, பட்டினி போடாதே. டோட்டு சொர்க்கத்திலிருந்து கண்ணீர் விடும்" என்றான் மனோஜ்.

அவனை முறைத்து, "எப்போது கேலியை நிறுத்துவாய்" என்றான் ஷண்பேகர்.

"செத்தபின்."

"மனோஜ், சீரியஸ், வெரி சீரியஸ்! இந்த மரத்தை வெட்டக் கூடாது."

"வெட்டாமல்!"

"பக்கபலம் இன்றி வெட்டக் கூடாது. எர்த் ஸ்டேஷனுக்கு உண்டான மற்ற காரியங்களைப் பார்க்கலாம். மெஷர்மெண்ட் எடுக்கும் போதுதான் மரத்தை வெட்ட வேண்டி வரும். அப்போது நம் பம்பாய் மேலதிகாரிகளை வரவழைத்துக் கொள்ளலாம். இப்போதைக்குத் தலையாரியிடம் சொல்லி விடலாம், மரத்தை வெட்டப் போவதில்லை என்று. இந்த ரேட்டில் போனால் நம் உயிருக்கே ஆபத்து வந்து விடும் போல உள்ளது. பைத்தியக்கார ஜனங்கள்."

"ஏதோ ஒரு சதி இருக்கிறது ஷண்,

---



காதலி : சின்ன ஏமாற்றத்தைக் கூட என்னால தாங்கிக் கொள்ள முடியாது டியர்.

காதலன் : அதுக்காக வாங்கின ரெண்டு கண்டல் பொட்டலத்தையும் பிரிச்சு ஒவ்வொரு கண்டலா எண்ணிப் பார்த்து அதிகமா இருக்கிற பொட்டலத்தைத்தான் எடுத்துப்பேன்னு சொல்லி டயத்தை வேஸ்ட் பண்றது கொஞ்சங் கூட சரியில்லே!

- ஆலத்தம்பாடி ராஜகோபால்.

இதில்.''

''எதாயிருந்தாலும் இப்போதைக்கு அதை நாம் கவனிக்க வேண்டாம். மரத்தை வெட்ட வரவில்லை. ப்ராஜெக்ட் ஆபீஸ் சொன்ன இடத்தில் எர்த் ஸ்டேஷனை நிறுவுவதுதான் நம் வேலை.''

**ரா**த்திரி ப்ரமிளா விளக்கை அணைக்காது தூங்க வேண்டும் என்றாள். அவளம்மாவுடன் பேச ஸிலாட் மூலம் இணைப்பை முயன்று பார்த்ததில் அம்மா, அப்பா இருவரும் வெளியூர் போயிருக்கிறதாகத் தகவல் வந்தது. அவன் மேலதிகாரியுடன் பேசும்போது, ''என்ன மனோஜ் மரத்தை வெட்டிவிட்டாயா?''

''வெட்டப் போகிறோம் ஸார்.''

''ஏதாவது ப்ராப்ளமா?''

''இ... இல்லை..''

''வெட்டி விடு. நான் ஸி.எம். லெவலில் கேட்டேன். முந்நூறு மீட்டர் வட்டத்துக்குக் கிளியராக இருக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். அதிலிருந்து வழுவினால் கியாரண்டி நாய்ஸ் ஃபிகர் வராது. உத்தர வாதப்படி வராது. டெலிவிஷன் எல்லாம் மணலாகத் தெரியும். வெட்டு!''

''ஸார் அது வந்து...''

ஷண்பேகர், அவன் மேலே பேசுவதைத் தடுத்து நிறுத்தினான். 'இப்போ வேண்டாம்' என்று சைகை செய்தான்.

அப்போது ஷண்பேகரைப் பார்ப்பதற்கு நடேச பண்டிதரின் வீட்டுப் பெண் வந்திருந்தாள். ''உங்களுக்கென்று செய்து வைத்த பொறியல்'' என்று சொல்லி விட்டு அவனை வாத்ஸல்யத்துடன் பார்த்து, ''இவங்ககிட்டச் சொல்லுங்க. நம்ம வீட்டில வந்து படுக்கட்டும். நிறைய எடம் கெடக்குது. சைட்டிலேயே படுத்திருப்பாரு போல...'' என்று கள்ளிப் பெட்டிகளில் அமைத்த ஷண்பேகரின் படுக்கையைப் பார்த்துச் சொன்னாள்.

ஷண்பேகர் அவனிடம், ''என்ன சொல்கிறாள்?'' என்று கேட்டான்.

''அவள் வீட்டில் வந்து படுத்துக் கொள்'' என்கிறாள்.

ஷண்பேகர் அவளையே பார்த்து ''பார்க்கலாம்'' என்றான் தமிழில்.

''தமழு பேசுதாரு?''

''மூணு வார்த்தை'' என்றான் மனோஜ். ''நீங்க போங்க'' என்றான்.

போனதும், ''ஷண்பேகர் உன்னிடம்...''

''மறுபடி உபதேசமா? அலுத்து விட்டது. என் விவகாரங்களில் தலையிடாதே. எனக்கு எந்தச் சிக்கலிலிருந்தும் தப்பிக்கும் திறன் இருக்கிறது. நீ எல்.என்.ஏ.யை கவனி. நான் கம்ப்யூட்டரைக் கவனிக்கிறேன்.



''உங்க படம் 'பெயிலியர்' ஆச்சே... அப்புறம் என்ன பண்ணீங்க?''

''அதைத் தெலுங்கிலே எடுத்து மீண்டும் தமிழில் 'டப்' பண்ணினேன்... பிச்சிட்டு ஓடிடுச்சு!''

- விஜயம்.

முனீஸ்வரன் மரத்தை நம் பாஸ் வந்ததும் கவனிக்கட்டும். வா கருப்பாயி...''

**கள்ளிப்** பெட்டிகளைத் திறக்கும் போது, ஒரு பாம்பு ஒளிந்து கொண்டிருந்தது மூலையில். அடிப்பதற்குள் அது மற்றொரு பாக்ஸின் பிளவில் போய் மறைந்து கொண்டது.

''இது வேறயா'' என்றான் மனோஜ். ''யாருய்யா பாம்பு புடிக்கிறவங்க. இது கூட முனீஸ்வரன் பாம்பு, வாழும் பாம்புன்னு புரளி பண்ணாதீங்க...''

''பாம்பு என்ன நிறமா இருந்ததுங்க?''

''அழுக்கா இருந்ததுப்பா. நாகப் பாம்பு இல்லை. அடிக்கணும்....''

''அடிச்சரலாங்க'' என்ற அவர்கள் தயங்க, ஷண்பேகர் தனக்கு ஒத்தாசைக்கு வந்திருந்த பெண்ணைக் கூப்பிட்டு, ''ஸ்னேக் அடிக்கிறியா?'' என்றான்.

அவள் சிரித்து ஒரு பெரிய கல்லை எடுத்து வர, ஷண்பேகர் அந்தப் பெட்டியைத் திருப்பினான். பாம்பு இல்லை.

''அது இந்நேரம் முனீஸ்வரன் இருப்பவரவழைச்சிருப்பாருங்க....''

''என்னது?''

''அவருதாங்க எச்சரிக்கையா அனுப்பிச்சிருக்காரு. இப்பத் தேடுங்க. பாம்பு கண்ல படாதுங்க. தினம் வருங்க, இனி இதே சமயத்துக்கு.''

''கடியாரம் கட்டியிருக்காய்யா பாம்பு?''

''ஒங்களுக்கு எல்லாம் கேலிதாங்க...''

ஆனால் அந்தப் பாம்பு அனைத்துப் பெட்டிகளைப் புரட்டிப் பார்த்தும், தேடிப் பார்த்தும் தென்படவில்லை.

''அவர்கள் சொல்வதில் உண்மை இருக்கிறது போலத்தான் தோன்றுகிறது'' என்றான் ஷண்பேகர்.

''டோண்ட் பி ஸில்லி'' என்றான் மனோஜ்.

சாயங்காலம் ஜெனரேட்டரை ஸ்டார்ட் பண்ணுவதற்காக அதன் ஹாண்டிலை எடுத்த போது பாம்பு ஷண்பேகரைக் கடித்து விட்டது.

(தொடரும்)



# சாணக்யா:
# டைரக்டராக மாறிய டாக்டர்!

**ரா**மாயணம், மகாபாரதம், திப்பு சுல்தான் வரிசையில், இன்று ஞாயிற்றுக் கிழமைகளில் மக்களை டி.வி. முன் கட்டிப் போட்டுக் கொண்டிருப்பது சாணக்யா. இதன் கதை, வசனம், ஹீரோ, இயக்கம் என்று எல்லாமே முப்பத்தொரு வயதான டாக்டர் சந்திரபிரகாஷ்தான். ஆம்; எம்.பி. பி.எஸ். படித்த டாக்டர் இவர்.

நம்மைக் கண்டதுமே, ''டாக்டருக்குப் படித்து விட்டு எதற்காகக் கலைத் துறைக்கு வந்தாய்? ஏன் மற்றொரு மாணவனுக்குக் கிடைத்திருக்கக் கூடிய வாய்ப்பைப் பறித்துக் கொண்டு, மருத்துவத் துறைக்கும் அநீதி இழைக்கிறாய்? என்றெல்லாம் கேட்காதீர்கள்! நாம் கற்றது எதுவுமே பயனற்றுப் போவதில்லை. சக்தியை அழிக்க முடியாதல்லவா! ஏதோ ஒரு ரூபத்தில் ஏதோ ஒரு விதத்தில் என் மருத்துவ அறிவு கலைத் துறையிலும் உதவுகிறது. அதை இந்தத் தொடரிலேயே நீங்கள் காண்பீர்கள்'' என்கிறார் சந்திரபிரகாஷ்.

டி.வியைப் பொறுத்தவரை 'சாணக்யா' மூலம்தான் இவர் அறிமுகம் என்றாலும் நாடக மேடைகளில் இவர் பழகிய முகம்தான். இந்தி - சமஸ்கிருத மொழிப் பற்று அதிகமாகவே இருக்கிறது இவருக்கு.

ஒன்பது வருட ஆராய்ச்சியின் பயனாகத் தான் 'சாணக்யா' பிறந்ததென்கிறார்! ''சாணக்யா என்னுடைய நெடுநாளைய சிந்தனை, கனவு ஆகியவற்றின் பாதிப்புகளின் பிரதிபிம்பம்; மனத்தில் ஆழமாக வேரூன்றியிருந்த கொள்கைகளின் வெளிப்பாடு; ஆத்மார்த்தமான படைப்பு!'' என்று உணர்ச்சிவசப்பட்டுச் சொல்லும் இவர், குறிப்பாகச் சாணக்யரைத் தேர்ந்தெடுத்ததற்கான காரணத்தையும் விளக்குகிறார்.

''சாணக்யர் அரசியல் ஞானி மட்டுமல்ல ; அவர் ஒரு விஞ்ஞானி; கணித மேதை; இலக்கியச் செம்மல்; மனோதத்துவ நிபுணர்; சிந்தனைகளைச் செயலாக்கத்





தெரிந்த தீரர் ; கத்தியைத் தீட்டாமல் புத்தியைத் தீட்டிப் பல வெற்றிகளைப் பெற்றவர். 'மன்னன் எவ்வழி மக்கள் அவ்வழி' என்பதை அன்றே உணர்த்தியவர்! புத்திசாலியான எதிரியை வீழ்த்த நினைப்பதைக்காட்டிலும் அரவணைப்பதே உசிதம் என்பதைச் சூசகமாக உணர்த்தியவர்; பல வகையிலும் அவரது திறமைகள் என்னை மிகவும் கவர்ந்தன. சாணக்யர் பாத்திரத்துக்கு என் கற்பனையையும் ஆங்காங்கே கலந்து உயிரூட்டியிருக்கிறேன்'' - என்கிறார்.

அவர் இப்படிச் சொன்னதும் ''ஐயையோ, திப்புசுல்தானுக்கு நேர்ந்தது போல இதற்கும் எதிர்ப்புகள் எழுமோ?'' என்று நாம் கவலையோடு கேட்க, அவர் சிரிக்கிறார்.

''திப்புசுல்தானைப் பற்றிச் சரித்திரத்தில் நிறைய ஆதாரங்கள் இருந்தமையால், சர்ச்சைக்கு இடமிருந்தது. ஆனால் சாணக்யாவைப் பொறுத்தவரை சரித்திர ஆதாரங்கள் மிகக் குறைவு! இருப்பதெல்லாம் குப்தர்கள் காலத்துச் சரித்திரமும், மாமன்னன் அலெக்ஸாண்டரின் படை எடுப்பைப் பற்றிய தகவல்களும்தான். சாணக்யரைப் பற்றிய செவி வழிக் கதைகளும் அந்தக் காலத்து நாடக இலக் கியங்களும்தான் அதிகம். அதனால் எதிர்ப்பைப் பற்றிய கவலையின்றி நான் கற்பனையைக் கலக்க முடிந்திருக்கிறது.''

இதனால் ஏற்பட்ட ஒரு வசதி, அன்றும், இன்றும் நம்





நாட்டை ஆட்டி வைக்கும் எல்லைப் பிரச்னைகள், நதிநீர்ப் பங்கீட்டுத் தகராறுகள், ஒற்றுமையின்மை, அந்நியர் ஊடுருவல், படை எடுப்பு... ஆகிய அனைத்தும், காந்தாரம், கேகேய நாடுகளுக்கிடையே நிலவி, கசப்பாக மாறியதாகக் காட்ட முடிந்திருக்கிறது. மன்னன் அம்பி, மன்னன் போரஸ், மாமன்னன் அலெக்ஸாண்டர் முதலியோருக்கிடையே எழுகின்ற போர், அதன் விளைவுகள், அதில் சாணக்யாவின் பங்கு முதலியவையும் காட்டப்படுகின்றன. இறுதியாக, பாடலிபுத்திரம் திரும்பிய சாணக்யர், தநாநந்தனை சிம்மாசனத்தினின்றும் இறக்கி, அந்த இடத்தில் சந்திரகுப்தனை முடிசூடச் செய்வதாகக் கதை சொல்லப்பட்டிருக்கிறது.

இந்தியாவின் ஒற்றுமைக்காகக் குறுநில மன்னர்களையும் மாமன்னர்களையும் இணைத்து, அந்நியர்களையும் அக்கிரமக்காரர்களையும் விரட்டி அடிப்பதென்று சாணக்யர் சபதம் எடுப்பதாகச் சந்திரபிரகாஷ் காட்டியிருக்கிறார்.

இயன்ற வரையில் சிறப்ப ஆதாரங்களின் உதவியுடன் சரித்திரச் சூழலைச் சிருஷ்டித்திருக்கிறார்கள்.

''இதில் பேசப்படும் இந்தி புரிந்து கொள்வதற்குக் கடினமாக இருக்கிறதென்று சிலர் கூறுகிறார்கள். உதாரணமாகப் 'பைசா' என்பதற்குப் பதிலாக, 'பண்' எனும் தூய இந்திச் சொல்லைப் பயன்படுத்தியுள்ளேன். இது அந்தக் கால கட்டத்துக்கேற்ற சொல். 'போஜன்' என்று சொல்வதைக் காட்டிலும், 'லஞ்ச்' என்று சொன்னால் இன்றைக்கு அனைவருக்கும் எளிதாகப் புரியும் என்பதற்காக 'லஞ்ச் பர் ஆயியே' என்று பாத்திரங்கள் பேசுவதாக அமைக்க முடி யுமா? அப்படி அமைத்தால் சாணக்யரின் காலத்துக்கு எப்படிப் பொருந்தும்? என்னால் இந்தத் தொடரின் மூலமாகவாவது நல்ல வார்த்தைப் பிரயோகங்களை அளிக்க முடிவதைப் பெரும் பேறாகக் கருதுகிறேன்'' என்கிறார் சந்திரபிரகாஷ்.

இதன் காஸ்ட்யூம் டிசைனரான சலீம் அரீஃபும் சரித்திர கால உடைகளை ஆதார பூர்வமாக உருவாக்க அதிக சிரத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார்.

போர்க் காட்சிகளுக்கென்று வில், அம்புகள், கூரிய கத்திகள், மார்புக் கவசங்கள், கையுறைகள், தலைக் கவசங்கள் முதலியவற்றை, இந்திய பாணியிலும் கிரேக்கர்கள் பாணியிலும் நூற்றுக்கணக்கில் செய்து வைத்திருக்கிறார்கள். சில கவசங்கள் தோலால் ஆனவை; சில உலோகத்தாலானவை. காலணிகள் கூட பெண்களுக்குத் தனி; ஆண்களுக்குத் தனி! மன்னர்களுக்கும் அதிகாரிகளுக்கும் மக்களுக்கும் தனித் தனியே 'பகடிகள்' (தலைப்பாகைகள்) பல நூறு உள்ளன.

''இந்தக் காலத்தில் பிரபலமாயிருக்கும் 'கன் மெட்டல்' அணிகள், அந்தக் காலத்திலேயே அணியப்பட்டு வந்தன என்பதை அறிந்தால் ஆச்சர்யப்படுவீர்கள்!'' என்கிறார் ஆரீஃப் கான்.



# ஆங்கிலப் பேராசான்

800 பக்கங்கள்
விலை ரூ.75-00
தபால் செலவு
ரூ.10-00

இன்று புதிதாய்ப் பிறந்தோம் என்ற எண்ணமதைத் திண்ணமுறக் கொள்வீர்! தரணி போற்றும் ஆங்கிலத்தைத் தண்தமிழ் மூலம் கற்பீர்!

எத்தனையோ கல்வி நிலையங்கள், நூல்கள் பார்த்தாயிற்று! இனிமேல்தானா ஆங்கிலம் வரப் போகிறது என்னும் கவலையுறாதீர்! அந்த ஈனக் கவலையை ஓட விரட்டுங்கள்!

ஆங்கிலத்தைக் கற்றுவிடவேண்டும் என உறுதியாக இருங்கள்! உதவி செய்ய இதோ, பேராசிரியர் வந்து விட்டார், 'ஆங்கிலப் பேராசான்' என்னும் நூல் வடிவில்! தேர்ந்த ஒரு பேராசிரியரே உங்கள் முன் நின்று கரும்பலகையில் எழுதிக்காட்டி ஒவ்வொரு சொல்லையும் வாக்கியத்தையும் விளக்குவது போல் அமைந்த நூல் இது!

'தமிழ் மூலம் ஆங்கிலம் கற்க ஒன்பது நூல்கள்' என்னும் எமது வெளியீடுகளில் முதல் ஏழு நூல்களைத் தொகுத்து ஒரே நூலாக பைண்ட் செய்துள்ளோம். தொடர்புக்காகப் பெயரைச் சிறிது மாற்றியுள்ளோம். இதனுள் அடங்கிய ஏழு நூல்கள் வருமாறு:

1. Basic English Grammar; 2. Advanced English Grammar (பிழையில்லாமல் நல்ல ஆங்கிலம் எழுதுவது எப்படி?); 3. Important Sentence Structure Part I; 4. Important Sentence Structure Part II; 5. Idioms and Phrases (மரபுச் சொற்களும் தொடர்களும்); 6. ஆங்கிலத்தில் கடிதம் எழுதுவது எப்படி?; 7. ஆங்கிலத்தில் பேசுவது எப்படி?

இந்த ஏழு அடங்கிய ஒன்றால் வெற்றி பெற முடியவில்லையென்றால், வேறெதனால் வெற்றி பெற முடியும்? எனவே முயலுங்கள்! உங்கள் முயற்சி சரியான முயற்சியாக இருக்கவேண்டும். தவறான முயற்சி அயர்ச்சி தரும்; தளர்ச்சி தரும்; இறுதியில் குழப்பம் மிகும்!

## ✓ சரியான முயற்சி என்றால் என்ன?

○ 1 அடிப்படை இலக்கணக் கூறுபாடுகளை (Basic English Grammar) முதலில் பொதுவாக அறிதல் வேண்டும். ○ 2 பின் அவ்விலக்கணப் பகுதிகளைச் சிறப்பாக (Advanced English Grammar) தெரிந்து கொள்ளவேண்டும். ○ 3 பொதுவாகவும் சிறப்பாகவும் இலக்கணக் கூறுபாடுகளை அறிந்து கொண்ட பிறகு Verb என்னும் வினைச்சொல்லைச் சிறிதும் ஐயத்திற்கு இடமின்றிக் கற்றுத் தெளிதல்வேண்டும். Verb என்று சொன்னாலே வீறு கொண்டு எழவேண்டும்; ஒரு சக்தி பிறக்கவேண்டும் மூச்சினில்! வாக்கிய அமைப்பின் (Important Sentence Structure Part I) ஜீவ நாடியான இது, ஆங்கில மொழிக்கே உயிர் போன்றதாகும். ○ 4 சொற்களின் கூட்டம் என்பது கொட்டி வைத்த கற்கள் போன்றது; வாக்கியம் என்பது கட்டி வைத்த கட்டடம் போன்றது. சொற்களை மேலும் மேலும் சேர்த்து எப்படி வாக்கியங்களைப் பல்வேறு வடிவில் அமைப்பது என்பதனை (Important Sentence Structure Part II) தங்குதடையின்றி உணர்தல்வேண்டும். ○ 5 சில சொற்களுக்கு Dictionary-யைப் பார்த்து நேராகப் பொருள் கொள்ள முடியாது. மரபுச் சொற்களும் தொடர்களும் (Idioms and Phrases) என்னும் அவற்றை மரபு வழியில் நின்று பொருள்கொள்ளவேண்டும். ○ 6 கடிதம் எழுதுவது (Letter Writing) ஒரு கலை. அதனைக் காவிய நயம்பட அறிதல் நன்று! ○ 7 இப்படி இலக்கணப் பகுதிகளையெல்லாம் அறிந்து உணர்ந்து தெளிந்தபின் 'ஆங்கிலத்தில் பேசுவது எப்படி?' என ஏன் அஞ்சவேண்டும்?

இவ்வளவும் முறையாக அமைதல்தான் சரியான பயிற்சியாகும். இது வாய்த்தபின் ஒரு குறையும் உண்டோ? நீங்கள் ஆங்கிலத்தில் பேசுவீர்கள்! ஆங்கிலத்தில் எழுதுவீர்கள்! இது மட்டுமா? பிறர் எழுதுவதில், பேசுவதில் உள்ள இலக்கணப் பிழைகளையும் உங்களால் சுட்டிக்காட்ட முடியும்!

இந்த ஒப்பற்ற 'ஆங்கிலப் பேராசா'னின் விலை மிகக் குறைவுதான்! ரூ. 75.00 தபால் செலவு ரூ. 10 சேர்த்து ரூ. 85.00 M.O. (அ) D.D. அனுப்புக. பதிவு அஞ்சலில் உடனே அனுப்புகிறோம்.

பணம் அனுப்பவேண்டிய முகவரி:

**Varthamanan Pathippagam**

ARR Complex
141, Usman Road, T. Nagar, Madras-17.
(பனகல் பார்க் அருகில்)

''கனமான தலை அணிகள், மார்புக் கவசங்கள், காலணிகள் முதலியவற்றை அணிந்து கொண்டு இயல்பாகச் சண்டைக் காட்சிகளில் நடிக்க முடியுமா? அதனால் படப்பிடிப்பு தொடங்குவதற்கு முன்பே, நடிகர்களுக்கு ஒரு மாதம் பயிற்சி அளித்தோம். ஸ்டண்ட் மாஸ்டர் ஷியாம் கௌஷலுக்கு ஏகப்பட்ட வேலை! 'வாள் எல்லாம் உண்மையான வாள் என்பதால், போர்க் காட்சிகளில் ரிஸ்க் அதிகம். ஆனால் செட்டில்தான் டைரக்டரும் ஹீரோவுமான டாக்டர்கூடவே இருக்கிறாரே!'' என்று சிரிக்கிறார்.

''இந்தத் தொடரில் 'டப்பிங்' இடையாது. காட்சிகள் நடிக்கப்பட, அப்படியே ரிக்கார்டு செய்யப்படுகின்றன. அதனால், உண்மையான வாள் போரின் சப்தங்களைத் தத்ரூபமாகப் பதிவாக்க, உண்மையான கத்திகளையே உபயோகிக்கிறோம்!'' என்கிறார் சந்திர பிரகாஷ்!

படப்பிடிப்பின் போது நடந்த சில சுவையான நிகழ்ச்சிகளையும் நினைவுகூர்கிறார் பிரகாஷ்.

''அலெக்ஸாண்டர் வெற்றி பெற்ற பிறகு, கிரேக்க சிப்பாய்கள் வெற்றிக் களிப்பில் ஆடிப் பாடுவதாக ஒரு காட்சி. 'உங்க விஷ்டத்துக்கு மகிழ்ச்சிக் கூத்தாடுங்கள் ; அப்படியே படமெடுத்து விடுகிறேன்' என்றேன். உடனே எல்லோரும், தாம் கிரேக்க வீரர்கள் என்பதை மறந்து விட்டு இந்திய ஸ்டைலில் 'பாங்ரா' ஆட ஆரம்பித்து விட்டனர்! நடிப்பு ரொம்பவும் தத்ரூபமாக இருக்க வேண்டுமென்று நினைக்கும் போது, இது போன்ற பிரச்னைகளையும் சமாளிக்க வேண்டியிருக்கிறது பாருங்கள்!

''ஒரு நடிகர் தன் பாத்திரத்தில் லயித்த வண்ணம், 'செட்'தான் போட்டிருக்கிறது என்கிற உணர்வேயின்றித் தூணில் ஓங்கி உதை விட, அந்த செட் அப்படியே தடதடவென்று கீழே சரிந்து விட்டது! இன்னொரு முறை எங்கள் யூனிட்டில் இருந்த ஐம்பது குதிரைகளில் ஒன்றுக்குத் திடீரென்று குஷி வந்து விட்டது! அது கன்னாபின்னாவென்று ஓட, நாங்கள் துரத்த, அது நடுரோட்டில் ஓர் ஆட்டோவைச் சாய்க்க... ஏககலாட்டாவாகி விட்டது...'' என்று சிரிக்கிறார் சந்திர பிரகாஷ்.

இந்தத் தொடரில் நடிப்பவர்களில் தொண்ணூறு சதவிகிதத்தினர் புதுமுகங்கள். பெரும்பாலோர் பம்பாயைச் சேர்ந்தவர்கள்; சிலர் டில்லி, ராஜஸ்தான், குஜராத்திலிருந்தும் வந்திருக்கின்றனர். மகாபாரத துரோணாச்சாரியாரான சுரேந்திர பாலையும், கல்யாணியாக வரும் மாளவிகா திவாரியையும் பழகிய முகங்கள் எனலாம்.

''நடிகர்கள் தேர்வின் போது குதிரை ஏற்றம் தெரிந்தவர்களுக்கு முன்னுரிமை வழங்கப்பட்டது. காட்சிகளை நீங்கள் உற்று நோக்கினால், குதிரைச் சவாரி செய்பவர்கள் அந்தக் கால கட்டத்தில் வழக்கத்திலிருந்தது போல் குதிரையின் முதுகில் ஆசனம் எதுவுமில்லாமல் சவாரி செய்வது தெரியும். இது மிகவும் கடினமானது. இதற்கென அவர்களுக்கு விசேஷப் பயிற்சி அளித்தோம்'' என்கிறார் சந்திரபிரகாஷ்.

''செலவு?''

''எட்டுக் கோடி ரூபாய்க்குள் முடியும் என்று நினைத்தோம். ஆனால் அது நடக்கவில்லை. தொடர் முடியும் போது செலவுத் தொகை பன்னிரண்டு கோடியைத் தொட்டு விடும் போலிருக்கிறது. இதையும் இன்னொரு சிறப்பம்சமாகச் சொல்லலாம்!'' என்று சிரிக்கும் சந்திரபிரகாஷுக்கு ஒரேயொரு வருத்தமும் இருக்கிறது.

தமது விதவைத் தாயாருக்குத் தமது பிரம்மாண்டமான 'சாணக்யா' தொடரைப் பார்த்து ரசிக்கும் அளவுக்குப் பார்வை இல்லை என்பதுதான் அந்த வருத்தம்!

- ஜெயஸ்ரீராஜ்

வண்ணப்படங்கள் :

அப்னர் பஸ்டேகர்



''அடுத்த வாரம் நம்ம கட்சி சார்பா நடத்தப் போற பட்டிமன்றத்துக்கு நீங்கதான் தலைமை தாங்கணும் தலைவரே!''

''பட்டிமன்றத்துக்கு என்ன தலைப்பு?''

''நம்ம கட்சி மக்களிடையே பரபரப்பாகப் பேசப் படுவதற்குப் பெரிதும் உறுதுணையாக இருப்பது மூனா கோஷ்டியா? வானா கோஷ்டியா?''

- ஞா. ஞானமுத்து.

# பட்டோபட்டு பொன்பட்டு மேனிக்கு






# ரெக்ஸோனா

தூய தேங்காயெண்ணெய் செறிந்தது.



டாக்டர். பாரதி மாரு

## மென்பட்டு மேனி காக்க எளிய குறிப்புகள்

**கே :** என் கண்களைச் சுற்றி கருப்பு வளையங்களும், சுருக்கங்களும் விழுந்துள்ளது. இவற்றை எப்படி அகற்றுவது?

**ப :** வெள்ளரியை சூடுபடுத்தி, பிதுக்கி, கூழ் போலாக்கி, மெல்லிய மஸ்லின் துணியில் சுற்றி வைக்கவும். கீழே படுத்து, கண்களை மூடி, ஒத்தடம் கொடுக்கவும். 15 நிமிடங்கள் ஓய்வு எடுக்கவும். பசும் நெய்யைத் தடவுவது கூட சிறந்த நிவாரணமாகும். கவனத்தில் கொள்ள வேண்டிய மற்ற விஷயங்கள்: 1. கண்களை அதிகமாக களைப்படைய விடாதீர்கள். 2. தினசரி குறைந்தது 8 மணி நேரமாவது தூங்குங்கள். வயிற்றுவலி, தலைவலி, பதட்டம் ஆகியவை ஏற்படுவதாலும் கண்களைச்சுற்றி கறுப்பு வளையங்கள் ஏற்படுகின்றன.

**கே :** என் நகங்கள் மிகவும் தொளதொளவென்று இருப்பதால், எளிதில் உடைந்து விடுகின்றன. இதற்கொரு நிவாரணம் சொல்ல முடியுமா?

**ப :** உங்கள் உணவில் ஜெல்லின், ஆப்ரிகாட் பழங்களைச் சேர்க்கவும். கேல்ஷியம், ஈஸ்ட் மாத்திரைகளை உண்ணவும். தொலைபேசி பயன்படுத்துகையில், பென்னில் உபயோகிக்கவும். ஒன்றிரண்டு சொட்டு வாதுமை எண்ணெய் மற்றும் க்ளிஸரின் பயன்படுத்தி நகங்களை மஸாஜ் செய்யவும்.

**கே :** என் மேக்கப் நீண்டநேரம் நிலைத்திருக்க வழி என்ன?

**ப :** உங்கள் சருமம் சாதாரணத்திலிருந்து, எண்ணெய்ப்பசை உள்ளதாக இருக்கலாம். முகத்தில் சோப் போட்டுக் கழுவவும். சிறிது பனிக்கட்டி எடுத்து ஒரு நிமிட நேரம் முகத்தில் தேய்க்கவும். எண்ணெய் கலவாத ஃபவுண்டேஷனை பயன்படுத்தவும். ஓரிரு நிமிடங்கள், மின் விசிறியின் கீழ் நிற்கவும். அதன் பின், ட்ரான்ஸ்லூஸெண்ட் பவுடரை முகத்தில் தடவவும்.

**கே :** என் உதடுகள் வறண்டுள்ளது. வாயின் ஓரப்பகுதிகள் புண்ணாகி உள்ளது. இதற்கு வழி என்ன?

**ப :** மலிவான தரமுள்ள லிப்ஸ்டிக்குகளைப் பயன்படுத்துவதை தவிருங்கள். உதடு க்ரீம் ஒன்றை கீழ்க்கண்டவாறு தயாரிக்கவும்: வீட்டில் தயாரிக்கப்பட்ட வெண்ணெய் ஒரு தேக்கரண்டியில் எடுத்து, ஒரு தேக்கரண்டி போரக்ஸ் க்ளிஸரினை சேர்க்கவும். அவை சரியாக கலக்கும் வகையில், முட்டையை அடித்துக் கலக்குவது போல் நன்றாக அடித்துக் கலக்கவும். தினசரி காலை மாலையில் இதை உதடுகள் மீது தடவவும். எதையோ நினைத்துக் கொண்டிருக்கும் போது உதடுகளை கடிப்பதையோ மெல்லுவதையோ தவிருங்கள்.

**கே :** என் மூக்கு மற்றும் வாயை சுற்றி கரும்புள்ளிகள் உள்ளன. இதை எப்படி அகற்றுவது?

**ப :** சோப் கொண்டு உங்கள் முகத்தை கழுவி, துண்டு வைத்து துடைக்கவும். அரை லிட்டர் நீரில் கை நிறைய வேப்பிலை அள்ளிப் போட்டு சூடு படுத்தவும். அதிலிருந்து வரும் ஆவியை பாதிக்கப்பட்ட இடங்களில் ஐந்து நிமிடங்களுக்கு பிடிக்கவும். பிறகு, மெதுவாக கரும்புள்ளிகளை நக்கவும். உடனே பனிக்கட்டிகளை அதன் மேல் தடவவும்.

**கே :** உடலிலும் முகத்திலும் கொசு/பூச்சிகள் கடிப்பதால் ஏற்படும் புண்களுக்கு நிவாரணம் என்ன?

**ப :** பூச்சி கடிக்கு மருத்துவரை அணுகவும். கொசு கடித்த இடங்களில் தேய்க்கவோ, சொறியவோ கூடாது. துளசி, வேப்பிலை, மஞ்சள் இலை மூன்றையும் சேர்த்து குழைவு போலாக்கி தடவவும். இது, புண்ணை தடம் தெரியாமல் ஆக்கி விடும். புளிப்பு உணவுகளைத் தவிர்க்கவும்.

**கே :** என் நகங்களைச் சுற்றியுள்ள தோல் உரிகிறது. மிகவும் வலியும் ஏற்படுகிறது. இதற்கு நிவாரணம் என்ன?

**ப :** வெந்நீரில் ஒரு தேக்கரண்டி ஏதாவது ஒரு எண்ணெயையும், ஒரு தேக்கரண்டி போரக்ஸ் க்ளிஸரினையும் கலந்து, தினசரி இரவில் 15 நிமிடங்களுக்கு கையை முக்கி நனைத்து வைக்கவும். அதன் பிறகு பழைய பிரஷ் கொண்டு, உரிந்த சருமத்தை அழுத்தாமல் இதமாக அகற்றவும். பிறகு ஒரு துண்டு கொண்டு இதமாக தடவவும். பெட்ரோலியம் ஜெல்லியை சேர்த்த பின் உறங்கவும். இது போல் 15 நாட்களுக்கு செய்யவும். பிறகு பலன்களைப் பார்த்து நீங்களே வியப்பீர்கள். உங்கள் சருமத்தை பிடித்து இழுக்காதீர்கள்.

**கே :** கை, கால் சருமத்தை எப்படி மென்மையாக்குவது?

**ப :** ஒரு தேக்கரண்டி தேனில், ஒரு தேக்கரண்டி க்ளிஸரினுடன் முட்டையின் வெள்ளைப் பகுதியை மட்டும் சேர்த்து நன்றாக அடித்துக் கலக்கவும். அதை தடவி ஒரு மணி நேரம் கழித்து கழுவி விடவும்.

வாசகர்கள் இம்முகவரிக்கு கேள்விகளை அனுப்பலாம்:

**Rexona**
P.O. Box 758, Bombay-1.

பி.கு.: உங்கள் எல்லா கேள்விகளுக்கும் தனித்தனியாக பதிலளிப்பது சாத்தியமில்லாமல் போகலாம். எனினும் வரும் இதழ்களில் உங்களது பிரச்னைகளுக்கு பதிலளிக்கிறோம்.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

# சிவகாமியின் சபதம்

## பன்னிரண்டாம் அத்தியாயம்
## மூன்று உள்ளங்கள்

காஞ்சி மாநகரின் வடக்குக் கோட்டை வாசல் வழியாக வாதாபிச் சக்கரவர்த்தி அந்நகருக்குள் பிரவேசித்துக் கொண்டிருந்த போது, தெற்குக் கோட்டை வாசல் வழியாகக் குமார சக்கரவர்த்தி வெளியேறிக் கொண்டிருந்தார்.

அவருக்கு முன்னால் முப்பதினாயிரம் பல்லவ வீரர்கள் அடங்கிய காலாட்படையும், ஐயாயிரம் போர்க் குதிரைகளும், நூறு போர் யானைகளும், மற்றும் சேனைப் பரிவாரங்களும் நகரிலிருந்து வெளியேறி, கோட்டைக்குச் சற்று தூரத்தில் அணி வகுத்துப் பிரயாணத்துக்கு ஆயத்தமாக நின்றன.

இடிந்து தகர்ந்து, பாதி தூர்ந்து போயிருந்த அகழியின் மேல், அவசரமாக அமைத்த பாலத்தின் மீது கண்ணபிரான் ஓட்டிய ரதம் விரைந்து சென்ற போது, அதன் சக்கரங்கள் கடகட சடசடவென்று சப்தம் செய்தன.

ரதத்தில் மாமல்லரும் பரஞ்சோதியும் வீற்றிருந்தார்கள்.

அகழிப் பாலத்தை ரதம் கடந்து அக்கரை சென்றதும், பாலம் அகற்றப்பட்டது. உடனே, கோட்டை வாசல் கதவுகள் தடார் தடார் என்று சாத்தப்பட்டன. அக் கதவுகளின் தாழ்களைப் போடும் 'லொடக்' 'லொடக்' என்ற சப்தமும், பூட்டுக்கள் பூட்டப்படும் 'டடக்', 'டடக்' என்ற சப்தமும், ரதச் சக்கரங்களின் 'கடகட, சடசட' என்ற சப்தத்துடன் கலந்து கொண்டன.

அச் சமயம் அந்த ரதத்தில் வீற்றிருந்த மூன்று பேரின் இருதயங்களுங்கூடப் 'படக்' 'படக்' என்று அடித்துக் கொண்டிருந்தன.

மாமல்லர் புறப்படுவதற்கு முன்னால் தமது அன்னை புவனமகாதேவியிடம் விடைபெற்றுக் கொள்வதற்காகச் சென்றார். அப்போது அந்த வீர மாதரசியின் கண்கள் கலங்கியிருந்தன. அவளுடைய உள்ளமும் கலக்கமடைந்திருந்ததாகத் தோன்றியது. துர்விநீதனைத் தண்டிப்பதற்காகப் புள்ளலூர்ப் போர்க்களத்துக்கு மாமல்லர் புறப்பட்ட போது, புவனமகாதேவி இத்தகைய மனக் கலக்கத்தைக் காட்டவில்லை. அச்சமயம் முக மலர்ச்சியுடனும் பெருமிதத்துடனும் வீரமகனை ஆசீர்வதித்து வாழ்த்தி அனுப்பினாள்.

''அம்மா! இது என்ன, ஏன் கலங்குகிறீர்கள்? போர்க்களம் எனக்குப் புதியதா? யுத்தந்தான் புதியதா?'' என்று மாமல்லர் கேட்டதற்குச் சக்கரவர்த்தினி, ''குழந்தாய்! அதைக் குறித்தெல்லாம் நான் கவலைப்படவில்லை. உன்னுடைய தந்தையின் காரியந்தான் என்னை வருத்துகிறது. தசரதர் செய்ததைக் காட்டிலும் கொடுமையான காரியத்தை உன் தந்தை செய்கிறார். தசரதர் இராமனைக் காட்டுக்கு அனுப்புவதோடு நின்றார். உன் தந்தையோ இராமனைக் காட்டுக்கு அனுப்பி விட்டு, அதே சமயத்தில் இராவணனையும் விருந்தாளியாக வரவேற்கப் போகிறார்!'' என்றாள்.

இதைக் கேட்ட மாமல்லரின் முகத்தில் சென்ற சில காலமாகக் காணப்படாத குறுநகை மலர்ந்தது.

''தாயே! நான் இராமன் அல்ல; இராமனாயிருந்தால், சீதையையும் கூட்டிக் கொண்டல்லவா காட்டுக்குப் போக வேண்டும்? என் தந்தையும் தசரதர் இல்லை. ஏனென்றால் கைகேயி வார்த்தையைக் கேட்டுக் கொண்டு அவர் என்னை வனத்துக்கு அனுப்பவில்லை. புலிகேசியோ நிச்சயமாக இராவணன் இல்லை. இராவணன் சுத்த வீரன், அம்மா! போர்க்களத்தில் சகலமும் போய்த் தன்னந்தனியாக நின்ற போதும் சரணாகதி அடைய மறுத்து உயிரை

விட்டான். அந்த மகாவீரன் எங்கே, இந்தக் கோழைப் புலிகேசி எங்கே? நூறு காத தூரம் படையெடுத்து வந்து விட்டு யுத்தம் செய்யாமலே அல்லவா இவன் திரும்பிப் போகப் போகிறான்?'' என்றார் மாமல்லர்.

''குமாரா! நீ என்னதான் சொன்னாலும் மொத்தத்தில் என் மனத்தில் அமைதியில்லை. பல்லவ குலத்தின் தீரா விரோதியுடன் உன் தந்தை சிநேகம் கொண்டாடுவது எனக்குப் பிடிக்கவில்லை; இந்தச்சமயத்தில் நீ காஞ்சியைவிட்டுப் போவதும் எனக்குச் சம்மதமாயில்லை. இதனாலெல்லாம் என்ன விபரீதம் வருமோ என்னவோ என்று என் மனம் சஞ்சலமடைகிறது!'' என்றாள் பல்லவ சாம்ராஜ்ய சக்கரவர்த்தினி.

மேற்கண்டவாறு அன்று காலையில் அன்னை கூறிய வார்த்தைகள் மாமல்லருடைய மனத்தில் ஆழமாய்ப் பதிந்து கிடந்தன. இன்னதென்று சொல்ல முடியாத சோர்வு அவருடைய உள்ளத்தில் குடிகொண்டிருந்தது. பெருமுயற்சி செய்து அந்தச் சோர்வைப் போக்கிக் கொள்ள முயன்றார். வரப்போகும் யுத்தத்தையும் பாண்டியனைத் தாக்கி அவனைத் தண்டிக்கப் போவதையும் நினைத்துக் கொண்டார். அதனோடு மண்டபப்பட்டுக் கிராமத்தில் இருக்கும் ஆயனர் மகளையும் எண்ணிக் கொண்டார். தாம் போகின்ற மார்க்கத்தை விட்டுக் கொஞ்சம் விலகிச் சென்றால், சிவகாமியைப் பார்த்து விட்டுப் போகலாம். ஆனால், அது உசிதமாகாது என்று அவருடைய மனமே சொல்லிற்று. புலிகேசியைப் புறங்காட்டி ஓடச் செய்து விட்டுத் திரும்பி அவளிடம் வருவதாக அல்லவா அன்றைக்குச் சொல்லிக் கொண்டு விடைபெற்றோம்? பாண்டியனையாவது போர்க்களத்தில் புறங்கண்ட பிறகுதான் சிவகாமியைச் சந்திக்க வேண்டும். இவ்வாறான பற்பல எண்ணங்கள் அலை மேல் அலை எறிந்து மாமல்லரின் உள்ளத்தை அலைத்துக் கொண்டிருந்தன.

தளபதி பரஞ்சோதியும் வழக்கத்தைக் காட்டிலும் அதிகக் கடுமையாகத் தம்முடைய முகத்தை வைத்துக் கொண்டிருந்தார். ஒரு பெரிய பொறுப்பு உணர்ச்சியானது அவருடைய மனத்தில் பெரும் பாரமாய் அமர்ந்து அதை அமுக்கிக் கொண்டிருந்தது.

அன்று காலையில் சக்கரவர்த்தி அவரை அந்தரங்கமாக அழைத்து, ''தம்பி! உன்னை நம்பித்தான் மாமல்லனை இப்போது போர்க்களத்துக்கு அனுப்புகிறேன். அவனுடைய இப்போதைய மனநிலையில் முன்பின் யோசனையில்லாமல் முரட்டுத்தனமாகக் காரியம் செய்வான். அவனுக்கு யாதோர் அபாயமும் நேரிடாதபடி நீதான் பார்த்துக் கொள்ளவேணும். இந்தப் புராதன பல்லவ குலம் நீடிப்பதற்கு அவன் ஒருவன் தான் இருக்கிறான். தளபதி! பாண்டிய நாட்டு மறவர்கள் மகாவீரர்கள். அவர்களையும் கங்க நாட்டார்கள் என்று நினைத்து விடாதே. எளிதாக அவர்களைப் புறங்காண முடியாது. ஆகையால், சர்வ ஜாக்கிரதையாகவே நீ இந்த யுத்தத்தை நடத்த வேணும்'' என்று சொன்னார்.

மீண்டும் அவர், ''மாமல்லனை நீ போர்க்களத்தில் வேல்கள் அம்புகளிடமிருந்து மட்டும் காப்பாற்றினால் போதாது'' என்று கூறி விட்டு, மர்மமான புன்னகையுடன், ''மண்டபப்பட்டுக் கிராமத்தில் இருக்கிறாளே, சிற்பியின் மகள் சிவகாமி, அவளுடைய கண்ணாகிய கூரிய அம்பியிருந்தும் காப்பாற்ற வேண்டும், தெரிகிறதா? முன் தடவை துர்விநீதனைத் தொடர்ந்து போன போது ஏற்பட்டதைப் போல் இந்தத் தடவை ஏற்பட்டு விடக் கூடாது. போகும்காரியத்தை முடித்து விட்டு நேரே காஞ்சிக்குத் திரும்பி வந்து சேர வேண்டும்'' என்றார்.

பரஞ்சோதி விடைபெற்றுக் கொண்டு புறப்பட யத்தனித்த போது, கடைசியாகச் சக்கரவர்த்தி அவரை மறுபடியும் அருகில் அழைத்து, ''தளபதி! நான் மண்டபப்பட்டுக் கிராமத்தைப் பற்றிச் சொன்னது திருவெண்காட்டுக்குப் பொருந்தாது. பாண்டியனைத் துரத்தியடித்த பிறகு உனக்கு விருப்பமாயிருந்தால் திருவெண்காட்டுக்குச் சென்று உன் தாயாரையும் மாமனையும் பார்த்து விட்டு வா!'' என்று அருமையுடன் கூறினார்.

சக்கரவர்த்தி கூறிய ஒவ்வொரு விஷயமும் பரஞ்சோதியின் பொறுப்பு உணர்ச்சியை அதிகப்படுத்துவதாகவே இருந்தது. ஆகா! மகேந்திர பல்லவர் எப்பேர்ப்பட்ட அபூர்வமான மனிதர்! அவருடைய அன்பையும் நம்பிக்கையையும் இவ்வளவு தூரம் பெறுவதற்குத் தான் என்ன பாக்கியம் செய்திருக்க வேண்டும்! ஆனால் அவ்வளவு அன்புக்கும் நம்பிக்கைக்கும் தான் பாத்திரமாக வேண்டுமே! மாமல்லரைப் பத்திரமாய்க் காஞ்சிக்குக் கொண்டு வந்து சேர்க்க வேண்டுமே? 'திருவெண்காட்டுக்குப் போய் விட்டு வா!' என்று சக்கரவர்த்தி கூறியது அவருடைய பெருந்தன்மைக்கு உகந்தது. ஆனால், அதற்கு இந்தச் சந்தர்ப்பம் தகுதியானதா? தன்னை இத்தகைய போர்க் கோலத்திலே பார்த்தால், தாயும் மாமனும் என்ன நினைப்பார்கள்? உமையாள்

அமரர் கல்கி



ஏற்கெனவே நாணம் அதிகம் உள்ளவள். தன்னை அணுகுவதற்கே இப்போது பயப்படுவாளோ என்னவோ? - இவ்வாறெல்லாம் தளபதி பரஞ்சோதி எண்ணமிட்டுக் கொண்டிருந்தார்.

ரதத்தின் முனையில் அமர்ந்திருந்த கண்ணபிரானுடைய மனக் கண்ணின் முன்னால் அடிக்கடி ஒரு காட்சி வந்து கொண்டிருந்தது.

விடை பெற்றுக் கொள்ள வேண்டிய சமயம் வந்த போது கண்ணபிரான் தன் எட்டு மாதக் குழந்தையின் முகத்தோடு முகம் வைத்து ''போய் வரட்டுமா, கண்ணே!'' என்று கொஞ்சினான். அந்தக் குழந்தை அர்த்தம் ஒன்றுமில்லாமலும் அகாரணமாகவும் புன்னகை புரிந்ததுடன் தன் இரண்டு இளந்தளிர்க் கரங்களையும் நீட்டிக் கண்ணபிரானுடைய நீண்ட இரு காதுகளையும் பிடித்துக் கொண்டது. மேற்படி நினைவு வந்தபோதெல்லாம் குழந்தையின் தளிர்க் கரங்கள் அவன் காதைப் பிடித்த இடங்களில் அவனுக்கு என்னவோ செய்தது. மறுபடியும் அந்த மதுரமான ஸ்பரிச இன்பத்தை எப்போது அடையப் போகிறோமோ என்று அவன் மனம் ஏங்கிற்று.

அதோடு கடைசியாக அவன் புறப்பட்ட போது கமலி கூறிய மொழிகளும் அவனுக்கு அடிக்கடி நினைவு வந்து கொண்டிருந்தன. முன்னெல்லாம், ''யுத்தத்துக்கு எப்போது புறப்படுகிறாய்?'' என்று கேட்டுக் கொண்டிருந்தவள், கண்ணபிரான் உண்மையாகப் புறப்படும் சமயம் வந்த போது, ''கண்ணா! மகேந்திர பல்லவருக்கு இப்படி ஏன் புத்தி கெட்டுப் போய் விட்டது? வாதாபிச் சக்கரவர்த்தியை விருந்தாளியாக வரவேற்பதாம்! பாண்டிய ராஜாவோடு சண்டை போடுவதற்கு மாமல்லரை அனுப்புவதாமே? என் மனம் ஏனோ தத்தளிக்கிறது! கண்ணா! எது எப்படியானாலும் என் தங்கை சிவகாமியை மறந்து விடாதே! மாமல்லருக்கு நினைவூட்டு!'' என்றாள்.

இவ்விதமாக, அந்த ரதத்தில் இருந்த மூன்று பேருடைய உள்ளங்களும் வெவ்வேறு சிந்தனைகளில் ஆழ்ந்தபோதிலும் பதைபதைப்பிலும் பரபரப்பிலும் வருங் காலத்தில் என்ன நேருமோ என்ற கவலையிலும் ஒன்றுபட்டிருந்தன. எனவே, அவர்களுடைய இருதயத் துடிப்புகள் ஒரே ஸ்வரத்தில், ஒரே தாளத்தில் சப்தித்தன.

## பதின்மூன்றாம் அத்தியாயம்
# இராஜோபசாரம்

வாதாபிச் சக்கரவர்த்தி காஞ்சிக்கு விஜயம் செய்ததிலிருந்து ஏழு தினங்கள் ஒரே திருவிழாக் கொண்டாட்டமாயிருந்தது.

ஒவ்வொரு நாளும் நகரின் ஒவ்வொரு பகுதிக்கு இரண்டு சக்கரவர்த்திகளும் விஜயம் செய்தார்கள். தினம் ஒரு கோயிலுக்குச் சென்றார்கள். ஒரு நாள் காஞ்சியின் கல்விக் கழகங்களையெல்லாம் பார்வையிட்டார்கள். ஒரு நாள் சிற்பக் கலை மண்டபங்களையும் சித்திர சாலைகளையும் பார்த்தார்கள். ஒருநாள் பௌத்த விஹாரங்களுக்கும் இன்னொரு தினம் ஜைனர்களின் கோயில்களுக்கும் சென்றார்கள். ஒரு நாள்

இரு சக்கரவர்த்திகளும் பட்டத்து யானை மீது அம்பாரியில் அமர்ந்து நகர் முழுவதும் பவனி வந்தார்கள்.

பழகப் பழக இரண்டு சக்கரவர்த்திகளுக்குள்ளேயும் சிநேகம் முதிர்ந்து வந்ததாகத் தோன்றியது. இந்தச் சிநேகத்தின் பயனாக வருங்காலத்தில் இரண்டு சாம்ராஜ்யங்களும் பெருநன்மையடையப் போகின்றன என்று மகேந்திர பல்லவர் எதிர்பார்த்ததுடன் அதைப் புலிகேசியிடமும் தெரியப்படுத்தினார். தமக்குச் சமண மதத்தினிடமோ புத்தசமயத்தினிடமோ எள்ளளவும் துவேஷம் கிடையாதென்றும், சைவ சமயமானது மற்ற எல்லாச் சமயங்களையும் சமநோக்குடன் பார்க்க இடந் தருகிறதென்றும், அதனால்தான் தாம் சைவ சமயத்தைச் சார்ந்ததாகவும், சமணர்களும் பௌத்தர்களும் அநாவசியமான விரோத பாவம் தம் பேரில் கொண்டிருப்பதாகவும் மகேந்திர பல்லவர் கூறினார். புலிகேசி தமக்கும் தீவிர மதப் பற்றோ, மதத் துவேஷமோ கிடையாதென்றும், இராஜ்ய காரணங்களை முன்னிட்டே சமண முனிவர்களுக்கு அதிகமாக இடங் கொடுத்து வந்ததாகவும் தெரிவித்தார்.

சமய போதனையில் ஈடுபட்ட குருமார்கள் இராஜ்ய விஷயங்களில் தலையிடவே கூடாதென்றும், தலையிடுவதால் அவர்களுக்கும் சமயத்துக்கும் நாட்டுக்குமே தீமைதான் என்றும் மகேந்திரர் கூறினார். அதை வாதாபிச் சக்கரவர்த்தியும் ஒப்புக் கொண்டார்.

மகேந்திர பல்லவர், ''உண்மையான சமய பக்தியுள்ள மகான்களாயிருந்தால் இராஜாங்க விஷயங்களில் தலையிடவே மாட்டார்கள்'' என்று சொல்லி, திருநாவுக்கரசர்



❑ சோவியத் யூனியனில் 4 கோடி பேர் பேசும் உக்ரேனிய மொழிக்கும் 1300 பேர் பேசும் எஸ்கிமோக்கள் மொழிக்குமிடையே 161 மொழிகளைப் பேசும் மக்கள் உள்ளனர். ரஷ்யன் தொடர்பு மொழியாக இருக்கிறதே தவிர இதர மொழிகள் எல்லாமே அந்தந்தப் பகுதிகளில் வழக்கில் உள்ளன.

இவையெல்லாம் சோவியத் ''யூனியனாக'' இருந்த போது. இனி எப்படியோ?

- ஆர். ஆர். பூபதி.

பெருமானுடைய வாழ்க்கை உதாரணத்தை எடுத்துக் காட்டினார். அந்த மகானைத் தாம் பார்க்க முடியுமா என்று புலிகேசி கேட்டதற்கு, ''யுத்தக் குழப்பங்களின் போது அந்தப் பெரியார் இங்கே இருக்க வேண்டாம் என்று நானே அவரைத் தீர்த்த யாத்திரைக்கு அனுப்பி விட்டேன். இப்போது எங்கே இருக்கிறார் என்றே தெரியவில்லை'' என்று மகேந்திரர் தெரிவித்தார். புலிகேசி அப்போது ''பல்லவ நாட்டு மகாசிற்பியைக் கூட நான் பார்க்க முடியாதோ?'' என்று கேட்க, மகேந்திர பல்லவர், ''யாரைச் சொல்லுகிறீர்கள்?'' என்று கேட்டார்.

''ஆயனர் என்பவரைத்தான்!'' என்றார் புலிகேசி.

''அவரைப் பற்றி உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று மிக்க வியப்புடன் மகேந்திர பல்லவர் கேட்டார்.

''காட்டின் மத்தியில் உள்ள சிற்ப வீட்டை ஒரு நாள் நான் பார்த்தேன். அதனுள் உயிருள்ள பிராணி எதுவும் இல்லை. ஆனால், உயிர்ச் சிலைகள் பல இருந்தன. அதிலும் வெகு வெகு அற்புதமான நடனச் சிலைகள் பல இருந்தன. அப்புறம் விசாரித்தேன். அந்த வீட்டில் ஆயனர் என்னும் மகா சிற்பியும், நாட்டியக் கலையில் வல்ல அவருடைய மகளும் வசித்ததாகவும், கோட்டை முற்றுகை காரணமாக அவர்கள் எங்கேயோ போய் விட்டதாகவும் தெரிந்தது. அவர்கள் தற்போது இருக்குமிடமும் தங்களுக்குத் தெரியாதோ?'' என்று வாதாபிச் சக்கரவர்த்தி கேட்டார்.

''அவர்கள் இருக்குமிடமும் தெரியும். அவர்களை அழைத்து வர ஆளும் அனுப்பியிருக்கிறேன். நாளை கூடும் மகா சபைக்கு அவர்கள் வந்தாலும் வருவார்கள்'' என்றார் காஞ்சிச் சக்கரவர்த்தி. அதைக் கேட்ட புலிகேசி மிக்க உற்சாகம் அடைந்தவராகக் காணப்பட்டார்.

**வா**தாபிச் சக்கரவர்த்தி காஞ்சி நகருக்குள் பிரவேசித்த எட்டாம் நாள், அவருக்கு பிரிவுபசாரம் நடத்துவதற்காகக் காஞ்சியின் பிரதான சபா மண்டபத்தில் பெரிய சபை கூடியது.

அந்த மகா சபையில் பல்லவ சாம்ராஜ்யத்தின் மந்திரிகள், அமைச்சர்கள், தனபதிகள், மண்டலத் தலைவர்கள், கோட்டத் தலைவர்கள், நகரத் தலைவர்கள், வர்த்தகச் செல்வர்கள் முதலியோர் வீற்றிருந்தனர். இன்னும் சைவ வைஷ்ணவ சமய குருமார்கள், வடமொழி வித்வான்கள், தமிழ் மொழிப் புலவர்கள், இரு பாஷைகளிலும் கவி பாடத் தெரிந்தவர்கள், சங்கீத வித்வான்கள், சிற்பிகள், சித்திரக்காரர்கள் முதலியோரும் வரிசைக் கிரமமாக வீற்றிருந்தார்கள்.

மேலே கூறப்பட்ட கூட்டத்தாருக்குள் பிரமுகர்கள் வாதாபிச் சக்கரவர்த்திக்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்டார்கள். வடமொழி, தென்மொழி ஆகிய இரு மொழிகளிலும் வல்ல புலவர்கள் அந்த மகத்தான சந்தர்ப்பத்துக்கேற்ற கவிதைகளைப் புனைந்து பாடினார்கள். இரண்டு சக்கரவர்த்திகளில் எவரையும் தாழ்த்தாமலும் ஒருவரையும் அதிகமாக உயர்த்தாமலும் சமமான புகழுரைகளை நிறைத்துப் புலவர்கள் பாடிய கவிகள், அவர்களுடைய கவித் திறத்தைக் காட்டிலும் அவர்களுடைய லௌகிக ஞானத்துக்கே சிறந்த உதாரணங்களாயிருந்தன.

பிறகு, சாம்ராஜ்யத்தின் சங்கீத வித்வான்கள் தங்களுடைய வித்வத்தைக் காட்டினார்கள். மகேந்திர பல்லவரால் புதிதாக அமைக்கப்பட்ட ஏழு நரம்புகள் உடைய 'பரிவாதினி' என்னும் வீணையைப் புலிகேசி பரிசிலனை செய்து மிகவும் மகிழ்ந்தார்.

இவ்வாறு நேரம் போய்க் கொண்டேயிருந்தது. ஆனாலும், மகேந்திர பல்லவர், வாதாபிச் சக்கரவர்த்தி இருவருமே கொஞ்சம் மன அமைதியின்றிப் பரபரப்பு உள்ளவர்களாகக் காணப்பட்டார்கள். மகேந்திர பல்லவரின் கண்கள் அடிக்கடி சபா மண்டபத்தின் வெளி வாசற்பக்கத்தை நோக்கிக் கொண்டிருந்தன.

கடைசியாக, அவர் உற்சாகமான குரலில், ''அதோ வந்து விட்டார்கள்!'' என்று கூறிய போது, பக்கத்திலிருந்த வாதாபிச் சக்கரவர்த்தி, ''யார்? ஆயனரும் அவர் மகளுந்தானே?'' என்று வினவினார்.

அப்போது உண்மையாகவே அச்சபா மண்டபத்தின் வெளி வாசல் வழியாக ஆயனரும் சிவகாமியும் உள்ளே பிரவேசித்துக் கொண்டிருந்தார்கள்.

வாசற்படியைத் தாண்டும் போது, சிவகாமியின் கால் வாசற்படியில் இடறிற்று. 'ஆஹா! இது என்ன அபசகுனம்?' என்று எண்ணமிட்டுக் கொண்டே சிவகாமி மானின் நடைபெற்ற மயிலைப் போலச் சபா மண்டபத்திற்குள் பிரவேசித்தாள்.

(தொடரும்)

# THE COLTS MAN

கட்டுப்படாத
கம்பீரம்!



**Colts**
VESTS
& BRIEFS



A Quality product from
**VIJAYAKUMAR MILLS LTD**
Kalayamputhur Post, Palani, Tamil Nadu - 624 615

---

Distributor for Madras : **Supreme Agencies,** 33, P.V.Koil Street Madras - 600 004
Distributor for rest of TN : **Priya Agencies,** 36, Saravana Street Ist Floor Udumalpet - 642 126

போட்டிக் கதை - 7

அறிமுக எழுத்தாளர்

# இப்போது அழுகிறேன்

**நா**ன் அழவில்லை. முகத்தை இன்னும் கொஞ்சம் விறைப்பாக வைத்துக் கொண்டேன்.

சத்தியமாகக் கத்துவீர்கள், ''நீயெல்லாம் மனுஷனா'' என்று. ''த்தூ...'' என்று முகத்தில் காறித் துப்புவீர்கள் விஷயம் கேட்டால்!

நாலடி தள்ளி அப்பாவை வடக்கு, தெற்காகக் கிடத்தி இருந்தார்கள். பின்னணியாக ஒப்பாரிகள்.

''அய்...யய்...யோ... அ...ப்...பா'' என்று அக்கா கதறிக் கொண்டே என்னைக் கட்டிக் கொண்டாள். நான் அவளை உதறி விட்டு, வாசல் திண்ணையில் வந்து உட்கார்ந்து கொண்டேன். ஒரு துளி அழுகை... ஊஹூம்!

ஆத்திரம் ஆத்திரமாக வந்தது எனக்கு. நான் பி.இ. மூன்றாம் வருடம். 'அதற்குள் ஏன் செத்துப் போனாய்? உன் கடைசிப் பையனை கான்வகேஷன் டிரெஸ்ஸில் பார்க்கப் பிடிக்கலையாப்பா... இனிமேல் என்னை யார் படிக்க வைப்பார்கள்?'

''ஏன் அண்ணா யாரும் இல்லையா?'' - என்று நீங்கள் கேட்பீர்கள். எனக்கு ரெண்டு அண்ணன்கள். யாராவது (உங்களில்) தம்பிக்காக மாதம் ஐந்நூறு, அறுநூறு செலவு பண்ணும் கல்யாணமான அண்ணன்களைப் பார்த்து இருக்கிறீர்களா?!

''ஏண்டா சீனு, (பெரிய அண்ணா), ரகுவுக்குச் சொல்லி அனுப்பலையா?'' ஒரு நிமிடம் பெரிய அண்ணா முறைத்தான். பின்பு ''சொல்லி அனுப்பறதா இல்லே'' என்ற பதில்.

ரமா (தங்கை) காப்பி வழங்கிக் கொண்டிருந்தாள், துக்கம் விசாரிக்க வந்தவர்களுக்கு.

''பெரியவர் பாதத்தைக் கடைசியா எல்லாரும் தொட்டு ஒத்திக் கோங்கோ...''

நான் நகர்ந்து கொண்டேன். பிடிக்கவில்லை. அம்மாவை விடப் பெரிய அக்கா நிறையவே மார்பில் அறைந்து, தலை தலையாக அடித்துக் கொண்டாள்.

காவேரி மணலில் அப்பாவை பஸ்பமாக்கிக் குளித்து வந்த போது...

''ஏண்டி ரமா, இன்னிக்கு டீ.வி.ல என்ன படம்?''

''ரெண்டு படம் அக்கா. இந்த கரண்டுக்காரன் இழவெடுக்காம இருக்கணும்.''

மூணு மணி நேரம் முன்பு வாயிலும், வயிற்றிலும் அடித்துக் கொண்ட அதே அக்கா, ரமா! ஓ! நிஜங்கள்.

யாரையும் பார்க்க, பேசப் பிடிக்கவில்லை. மொட்டை மாடிக்குப் போய் வானத்தை வெறித்தேன்.

'எத்தனை பன்னிரண்டு மணி.. எத்தனை முறை ஏலக்காய் டீ... பி.இ.. சேர எத்தனை பகீரதப் பிரயத்தனம். நீ கூட நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டு, எனக்குத் துணையாக உட்கார்ந்திருப்பியே... ஏம்ப்பா! அதுக்குள்ள மேலே போயிட்டே! சொல்லப் போனா நீதான் என்னைத் தூண்டினே. பஸ்ல போகும் போது அந்த இஞ்சினீயரிங் கல்லூரியைக் காண்பித்து நீதான் ஆசையை வளர்த்தே. இப்போ, தொட்டிலையும் ஆட்டி விட்டுப் பிள்ளையையும் ஏன் கிள்ளறே?'

எனக்கு கார்த்தி ஞாபகம் வந்தது.

அவனுக்கு மூன்று அண்ணன்கள், மாதம் மும்முறை மணி ஆர்டர் வரும். அவன் அப்பா அவனைப் படிக்க வைக்கிறார். அது வேறு விஷயம்.

எனக்கு அவ்வளவு பேராசை இல்லை. மாதா மாதம் மெஸ் பில், படிப்பு, செலவு... இதற்குக் காக கொடுத்தால் அதுவே போதும். சினிமா, மியூசிக் கிளாஸ், ஜிம் எல்லாவற்றையும் விட்டு

ஏ.வி. ஹரிஹரன்



விடுகிறேன். அண்ணிகள் மனசு வைப்பார்களா?

'கூச்மூச்' என்ற சப்தம், யாரோ சண்டை போட்டுக் கொள்வது போல. ''த்தூ! நீயெல்லாம் மனுசனா?'' என்ற குரல்... அதை அமுக்குவது போல் ''வெளியே போடா நாயே!'' என்ற பெரியண்ணாவின் கட்டைக் குரல். விழுந்தடித்துக் கொண்டு ஓடினேன்.

வேறு யாருமில்லை. சின்ன அண்ணா ரகு.

''நானும் செத்துப் போன பெரியவருக்கு (அப்பா?) ஒரு மகன். ஏன் சொல்லி அனுப்பலே?'' ரகு சுற்றுமுற்றும் பார்த்தான். ''ஏம்மா! உனக்கு எத்தனை வயசு. எத்தனை சாவு பார்த்திருப்பே. தோணலையா சொல்ல...?''

அவன் குரல் பிசிறு தட்ட ஆரம்பித்தது. உதடுகள் விம்முவதைக் கண்டேன். தொடர்ந்து அது வெடித்து.... பெரிய அழுகையாகி, ''நான் பாவி! கடைசியாப் பார்க்கும் பாக்கியம் கூடக் கிடைக்கலே. நான் பாவி... பாவி...''

தொடர்ந்து ''மடேர்... மடேர்'' என்று தூணில் அடித்துக் கொள்ளும் சப்தம்.

''ஒப்பாரியெல்லாம் அவங்க அவங்க வீட்டிலே வைச்சிக்கலாம். இங்கே வேணாம். இடத்தைக் காலி பண்ணலாம்.''

'நறுக்'கென்று ஊசி குத்தினாற் போல... அழுது சிவந்த ரகு அண்ணாவின் கண்களில் ரத்தம் கொப்புளித்தது. விட்டால் பெரிய அண்ணாவைக் கடித்து விடுவான் போல. அப்படி ஒருமுறைப்பு.''

''இப்ப முறைச்சு என்ன பிரயோஜனம்? நாங்கள்லாம் வேண்டாம்னு எவளோ ஒருத்தியைக் கட்டிக்கிட்டியே.... அதுவும்இதே ஊர்ல வீடு பார்த்து செட்டில் ஆனியே... உன்னாலே எவ்வளவு அவமானப்பட்டோம். முதுகுக்குப் பின்னாலே எத்தனை கேலிகள். பரிகாசங்கள். போப்பா! உன்னது தான் அமரத்துவம் வாய்ந்த காதலாச்சே. எதுக்கு அழறே?''

ரகு அண்ணா எழுந்து கொண்டான்.

''நீ பெரிய யோக்கியனோ! உன் வண்டவாளம் எனக்குத் தெரியாதா? கல்யாணமான மூணாம் நாளே தனிக்குடித்தனம் போனவன் நீ. நீ பேசாத...''

தொடர்ந்து வாக்குவாதங்கள்... குழாயடிச் சண்டைகள். நான் நம்பிக்கை இழந்தேன். இவர்களா என்னைப் படிக்க வைப்பார்கள்!

இரவு பத்து மணி.

''சந்துரு, பெரியண்ணா கூப்பிடறார்...''

''ஏண்டா, எப்ப காலேஜ் ரீ-ஓபனிங்?''

''ஆகஸ்டு ஆறு. ரூபாய் 310 எக்ஸாம் பீஸ். இப்பத்திய மார்க் பர்சன்டேஜ் 75. இது வரை ஒரு பேப்பர் கூட அரியர்ஸ் வாங்கலே. வாங்கவும் மாட்டேன்'' என்று கடகடவென்று ஒப்பித்தேன்.

''ரெண்டு மாசம் இருக்கா இன்னும்!'' பின்பு கொஞ்ச நேரம் கழித்து, ''பார்ப்போம்!''

அந்த ''பார்ப்போம்'' நம்பிக்கை யாகப்படவில்லை. வராந்தாவில் கயிற்றுக் கட்டிலில் படுத்துக் கொண்டேன். தூக்கம் வரவில்லை. உள் ரூம் சம்பாஷணைகள் தெளிவாகக் கேட்டன.

''தோ பாரும்மா! ஆயிரத்தெட்டுத் தானம் என்னால பண்ண முடியாது. ஏதோ பொதுவா ஒரு தானம்... அவ்வளவுதான்.''

அம்மா பேசவில்லை. அவள் அழுகை பதிலாயிற்று.

''இப்ப எதுக்கு ஒப்பாரி வைக்கறே. எங்கப்பன் என்னைக் கலெக்டருக்குப் படிக்க வைச்சிட்டான் பாரு. நான் ஆயிரத் தெட்டுத் தானம் செய்ய. எனக்கும் பொண் டாட்டி, புள்ளை எல்லாம் இருக்கு.''

''...............''

கொஞ்ச நேரம் கழித்து, ''ஏம்மா! இந்த வீட்டை வித்துருவமே... இல்லே! சந்துரு படிப்பு இருக்கு. அதுக்கு உபயோகமாகு மேன்னு...''

''போ! வித்துத் தொலைச்சுடு. அது ஒண்ணுதான் அவர் சம்பாத்தியம். அதை வித்துத் தொலைச்சிடணும். அப்பத்தான் பரம திருப்தி உனக்கு.''

கொஞ்ச நேரம் பேச்சே காணோம். கடிகாரம் மீண்டும் ஒரு முறை அலறியது.

''சந்துருவும் படிப்பான். அங்கே எவளையாவது பார்த்து இளிப்பான். ஒண்ணு இழுத்துண்டு ஓடிடுவான். அல்லது மூணு முடிச்சுப் போட்ட மறு நிமிஷம் வீடு பார்ப்பான், தனிக்குடித்தனத்துக்கு..''

அம்மா அதிகமாக மூச்சு விடுவது, தெளி வாகக் கேட்டது. அவள் முகத்தின் கோபக் கனல்களைக் கற்பனையில் கண்டேன்.

''உங்களுக்கெல்லாம் ஒரு தங்கை, ரமான்னு... தாவணி போட்டவ. அவ ளுக்குக் கல்யாணம் பண்ண நான் யார் கிட்டே பிச்சை எடுக்கறது?''

அம்மாவின் அந்த வார்த்தையில் நான் அதிர்ந்து போனேன். அம்மாவா அந்த வார்த்தை சொன்னாள். ரமாவை எப்படி யெல்லாம் நான் நேசித்தேன். ஆல் இண்டியா டூர் போன சீனியர்களிடம் காசு கொடுத்து, ஹைதராபாத் வளையல்களும், கல்கத்தா காட்டன் சாரியும் வாங்கித் தந்த என்னை வைத்துக் கொண்டா இப்படிச் சொல்கிறாள்...

இருந்த நம்பிக்கை முழுதும் கரைந்து போனது. தினம் ஆஞ்சநேயர் கோவில் போனேன். 'ஸ்ரீ ராம தூத மஹாதீர' சொன் னேன். கூட்டம் இல்லாத போது 'ஓ'வென்று அழுதேன். ''பகவான் கைவிட மாட்டார் தம்பி'' என்று ஒரு பாட்டியம்மா ஆறுதல் கூறினாள்.

ஒரு நாள் கோவிலில் ரகு அண்ணா வைப் பார்த்தேன்.

''உங்கூட கொஞ்சம் பேசணும் சந்துரு.''

''உன் பி.இ. விழுக்காடு எல்லாம் கேள்விப்பட்டேன். ரொம்ப பெருமைப்பட றேன்..''

''...................''

''முந்தா நாள் வீட்டுக்கு வந்திருந்தேன். சீனு கூப்பிட்டான். அவனால முடியாதாம். உன் படிப்புக்கு என்ன பண்றதுன்னு கேட் டான். மாசம் மூவாயிரம் சம்பளம் வாங்க றவன்...''

நான் ஜடமாக நின்றேன்.

''ஆயிரம் ரூபா சம்பளக்காரன், நான் என்ன செய்ய முடியும் சொல்லு. அவ ஏதோ 'டைப்' அது இதுன்னு போயி நூறு, இருநூறு கொண்டு வரா...''

'சொல்ல வந்ததைச் சொல்லித் தொலை யேன். ஏன் காயத்தைக் குத்திக் கிளறி ருசி பார்க்கிறே?'

''நான் சிகரெட் பிடிக்கறதில்லே. சாரா யமும் கிடையாது. அவ சினிமா, கதைப் புத்தகம் எதுவும் நச்சரிக்கறது இல்லே.''

'சுற்றி வளைத்து என்ன சொல்கிறாய்?'

அப்போது, அப்போதுதான் அந்த தெய்வக் குரலைக் கேட்டேன். ரகு அண்ணா என் கைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். கண்கலங்கி, குரல் வெகு வாகக் கரகரத்து, ''சந்துரு! நான் உன் படிப்புச் செலவை ஏத்துக்கறேண்டா. படிப் பாயா? என் உதவியை மறுக்க மாட்டாயே! சொல்லுடா ப்ளீஸ்...''

நான் என்னைக் கிள்ளிக் கொண்டேன். வலித்தது. நிஜம்தான். எனக்கு இப்படி ஒரு அண்ணா! கார்த்தியின் அண்ணன்களை விட ஒரு படி மேலாக...

''ஏண்டா! ஏத்துக்க மாட்டாயா?''

''அ...ண்...ணா'' அவன் தோளில் முகம் புதைத்து முதல் முறையாக அழ ஆரம் பித்தேன். அப்பா செத்த போது அழாத நான் இப்போது... இப்போது அழுகிறேன்.



''என்ன 302... இராம் நகர் கொன்னை வழக்கு என்னாச்சு?''

''பார்ட்டி யாருன்னு கண்டுபிடிச் சாச்சு சார்! மாமூல் வாங்க வேண்டி யதுதான் பாக்கி!''

- வேதபுரி எஸ். ரமேஷ்.

# எம்.ஜி.ஆர். நகரில்

பசி வேளையில் எழுதப்பட்ட விமர்சனம்...



இலையில் சாதம் போடுவார்கள். யாராவது பொரிகடலை போட்டுப் பரிமாறுவார்களா? சாப்பிடச் சொல்வார்களா? நடந்திருக்கிறது எம். ஜி..ஆர். நகரில்'.

சதா நேரமும் பெண்களின் பின்னால் அலையும் நான்கு இளைஞர்களின் பக்கத்து வீட்டுக்கு ஓர் அழகான (மூக்கைத் தவிர) யுவதி குடி வருகிறாள். தன் அண்ணன் சிவாவின் தற்கொலைக்கு(?)க் காரணம் கண்டு பிடிப்பது அவள் நோக்கம். அவளிடம் நெருங்கிப் பழகி, காதலில் வெற்றி பெற நால்வரும் முயற்சி செய்கிறார்கள். தாங்கள் சிவாவின் நண்பர்கள் என ரீல், உடான்ஸ், புருடா, ஜபல் விடுகிறார்கள். இடியாப்பச் சிக்கலில் மாட்டிக் கொள்கிறார்கள். எப்படித் தப்பிக்கிறார்கள்? என்ன இடியாப்பம் என்பது நகைச்சுவைக் கொத்த கலந்து தரப்படுகிறது.

இளைஞர்கள் : விவேக், சார்லி, ஆனந்த் பாபு, புதுமுகம் கண்ணன். அவர்களின் துரத்தல்களும், போட்டிகளும்... சைவக்காரர்கள் மத்தியில் கருவாடு வறுப்பது போல, குடும்பத்தோடு பார்க்க ஒரு மாதிரியாக இருக்கிறது. சில இடங்களில்தான் ரசிக்க முடிகிறது.

உப்புப் போதாது, காரம் கூட என்று குறை கூறுவதென்றால் அடுக்கிக் கொண்டே போகலாம். கதையில், காட்சிகளில் அத்தனை தடுமாற்றம்!

பாடல் காட்சிகளில் நீர்வீழ்ச்சி உத்தி சரிதான். ஆனால் அது எம்பிக் குதித்து அசடு வழிந்திருக்க வேண்டுமா? இது, வேகாத வடை என்றால் கன்னியாஸ்த்ரியின் பிளாஷ்பேக்கில் காதல் காட்சிகள், கவளச் சோற்றில் இரட்டைக் கற்களைக் கடித்தது போல வெறுப்பேற்றுகிறது.

டைரக்டர் அஷ்ரப்! சூப்பர் குட் ஃபிலிம்ஸ் தயாரிப்பு என்றாலே நான்கு இளைஞர்கள், ஒரு பெண், கடைசியில் நட்பு ஸ்பெஷல் என கை அசைத்து விட்டுப் போவது என்றாகி விடுமோ? ரொட்டிக் கடையில் போண்டா சாம்பாரா கிடைக்கும்?

புது நெல்லு, புது நாத்து... நெப்போலியன், சுகன்யா போன்ற பாகமதி ரக அரிசியைச் சமைத்துப் பழைய சோற்றுக்குப் பயன்படுத்தி இருப்பது அநியாயம். கவிஞர் அப்துல் ரகுமானைத் துணைக்கு அழைத்திருக்கிறார்கள். உப்புமா கிளற கேட்டரிங் டெக் நிபுணர் எதற்கு?

இசை ?

தாளிப்புக்கான கறிவேப்பிலை.

- சுந்தர்ஜி

# வாஷிங்டன்... ...வைரம்

## ஒரு மர்மத்தின் ஆரம்பம்

அந்த ஆள் ஆறடி உயரம் இருந்தான். வலது கண்ணுக்குக் கீழே இருந்த வடு, முகத்துக்கு ஒரு பயங்கரத்தைத் தந்தது. வாஷிங்டனில் உள்ள உலகப் பிரசித்தி பெற்ற ஸ்மித்ஸோனியன் மியூசியத்தில் அவன் ஒரு காகிதப் பையை உதிர்த்தான். காவலுக்கிருந்த ஜிம், குப்பை போட்டதற்காக அவனைப் பிடிக்க நினைத்த போது வேகமாக ஓடி விட்டான். அவனை வைது கொண்டே காகிதப் பையைப் பொறுக்கி குப்பைத் தொட்டியில் போட்ட ஜிம், உள்ளுணர்வு எச்சரிக்க, சட்டென்று தாவி, பாதுகாப்பாகக் குப்புறப் படுத்துக் கொண்டான். அதனால், குண்டு வெடித்ததில் இடது கால் காயத்துடன் தப்பினான்.

ஆஸ்பத்திரியில் அவனை போலீஸாரும் எஃப். பி. ஐ. யும் விசாரிக்க, அந்த ஆளை வர்ணித்து, ''அவன் ஓர் இந்தியனாக இருக்கலாம்'' என்றான் ஜிம். ஆனால் முகத்தில் காணப்பட்ட வெட்டுக்காய வடு பற்றிக் குறிப்பிடாமல் மறைத்து விட்டான்!

போடோமாக் பகுதியில் டாக்டர் சிவராமன் அளித்த விருந்தில், சரித்திர ஆய்வாளர் வைரமூர்த்தி கலந்து கொண்டார். அவர் காரியதரிசி நிர்மலாவும் வந்திருந்தாள். அப்போது டீவி செய்தி, வெடி சம்பவம் பற்றிக் கூற, ''ஸ்மித்ஸோனியன் மியூசியங்களில் பாதுகாப்பு ஏற்பாடுகள் போதாது'' என்றார் பேராசிரியர் வைரமூர்த்தி. ''அங்கு எந்தப் பொருளும் எப்போது வேணுமானாலும் திருடப்படலாம்!'' அவர் பேச்சும், அப்போது அவர் முகத்தில் நிலவிய அலாதியான திருப்திப் புன்னகையும் நிர்மலாவைச் சிந்திக்க வைத்தன.

## 3

**ம**றுநாள் காலை பனிச்சென்று சூரியன் தன் ஒளிக் கோலத்தை ஆரம்பித்தாலும், அந்த ஒளியில் அதிக வெப்பமில்லை. நிர்மலா அந்த மே மாதத்தின் இனிய காலையில் எப்போதும் போல் எட்டரை மணிக்கு டாக்டர் வைரமூர்த்தியின் ஆபீஸ் அறையின் முன்னறைக்கு வந்து சேர்ந்தாள். டாக்டர் வைரமூர்த்திக்குக் காரியதரிசியாக அவள் தினமும் அரை நாள் வேலை செய்கிறாள். காலை எட்டரை முதல் பகல் பன்னிரண்டரை வரை வேலையை முடித்துக் கொண்டு அவளுடைய இரண்டாவது வேலைக்குப் போவாள். டாக்டர் வைரமூர்த்தியுடன் கடந்த ஒன்பது மாதங்களாக அவள் வேலை செய்த நாட்களில் இந்திய சரித்திரத்தைப் பற்றி நிறையவே அறிய வாய்ப்பு அவளுக்கு ஏற்பட்டது. அவருடைய சரித்திர அறிவாற்றலை நினைக்கும் போது அவள் ஆச்சர்யப்படுவதும் உண்டு. அவருடைய கடுமையான உழைப்பு அவளுக்கு உற்சாகத்தையே அளித்தது.

ஆனால்... 'ஸ்மித்ஸோனியன்' பற்றிய பாதுகாப்பற்ற நிலையை அவர் குறிப்பாகச் சொன்னதன் குழப்பம் இன்னும் தீரவில்லை. ஆபீசுக்கு அவர் வந்ததும் கேட்கலாமா என்ற தன்னுடைய மன உளைச்சலை அவள் எடை போட்டாள்.

காப்பி தயாரிக்கும் இயந்திரத்தை முடுக்கி, காப்பி, பில்டர், என்று எல்லாவற்றையும் சரிசெய்தாள். இன்னும் பத்து நிமிடங்களில் காப்பி தயாராகி விடும். டாக்டர் வைரமூர்த்தி வரும் போது மணி ஒன்பதாகி விடும். அவர் வந்ததும் காப்பி தயாராக இருந்தால் நாள் நல்லபடியாக ஓடும். அமெரிக்காவில் பெண்கள் இயக்கங்கள் எவ்வளவு மும்முரமாக இருந்தாலும், காலையில் ஆபீசுகளில் பெண் காரியதரிசி காப்பி போடுவது இன்றும் தினந்தினம் பார்க்கக்கூடிய காட்சி.

தன்னுடைய இடத்துக்கு நிர்மலா திரும்பி வந்த போதுதான் மேசையின் மேலிருந்த 'டாக்டர் வைரமூர்த்தி' என்று பெயரிட்ட ஒரு கவரைப் பார்த்தாள். அதை அவருடைய அறையில் வைக்கலாம் என்று போனாள். அறைக் கதவை அவள் நெருங்கிய போது டாக்டர் வைரமூர்த்தி ஏற்கெனவே ஆபீசுக்கு வந்ததில்லாமல், யாருடனோ பேசிக் கொண்டிருப்பதும் காதில் விழுந்தது. அவருடைய அறைக் கதவு முழுசாகச் சாத்தப்படாமல் இருந்ததை நிர்மலா கவனித்தாள். திரும்பி விடலாம் என்று நினைத்தவளை உள்ளிருந்து வந்த பேச்சுக் குரல் தடுத்து நிறுத்தியது. கதவுக்குக் கிட்டே போய் நின்றாள். பேசியது ஓர் ஆண்.

வாசன்

''அப்படின்னா, அடுத்த வாரம் இன்னொரு 'எக்ஸ்ப்ளோசிவ்' வைக்காதேன்னு சொல்றியா?'' ஒவ்வொரு சொல் லும் நிர்மலாவின் காதைக் கதவுடன் ஒட்டிக் கொள்ளும்படி செய்தது.

'என்ன இது? வெடிகுண்டா?' நிர்மலா உள்ளிப்பாகக் கேட்டாள். வைரமூர்த்தியின் குரல் அடுத்ததாக ஒலித்தது.

''ஆமாம்... நீ வாஷிங்டன் டிசியிலிருந்து வேறு எங்காவது போய்த் தலைமறைவா இருந்துக்கணும். நேரம் வரும் போது மற்றதை நாம் செய்யலாம்.''

''வைரம்... என்னை நீ 'டபிள் கிராஸ்' பண்ண மாட்டேன்னு நினைக்கிறேன்'' குரல் கடுமையாக இருந்தது.

'டாக்டர் வைரமூர்த்தியை வைரம் என்று சொல்லுமளவு அவருக்கு நெருங்கிய நண்பன், வெடிகுண்டைப் பற்றி ஏன் பேச வேண்டும்?' நிர்மலா மேலும் குழம்பினாள்.

''அநாவசியமா கவலைப் படாதே! 'சான் பிரான்ஸிஸ்கோ' போயிடு. போனவுடன் எனக்கு போன் செஞ்சி எங்கே இருக்கேன்னு சொல்லிடு. நான் நேரம் வரும் போது உன்னை 'கான்டாக்ட்' செய்யறேன்... இந்தா... உனக்கு விமான டிக்கெட் வாங்கிட்டேன்...'' வைரமூர்த்தி முடித்தார்.

விரைந்து திரும்பி தன்னிடத்தை அடைந்தாள்.

வைரமூர்த்தியின் அறைக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்த ஒரு மனிதன் நிர்மலாவின் மேசையருகே வந்ததும் சட்டென நின்றான். அவனை ஏறிட்டுப் பார்த்த நிர்மலா பயந்தே விட்டாள். அந்த மனிதனின் வலது கண்ணுக்குக் கீழே நீண்ட வடு இருந்தது. அது அவ னுடைய முகத்திற்கு பயங்கரத் தோற்றத்தைக் கொடுத்தது.

நிர்மலா பார்வையைக் கீழே இறக்கினாள். அந்த மனிதன் விரைவாக நடந்து வெளியேறினான்.

''மிஸ், நிர்மலா... நீ எப்ப வந்தே... ரொம்ப நேரமாச்சா?'' வைரமூர்த்தியின் குரலில் கொஞ்சம் பதற்றம் இருந்தது.

''மணி ஒன்பதாகப் போகிறதே டாக்டர் வைரமூர்த்தி... நான் வந்து சுமார் அரை மணி நேரமாவுது'' என்றாள். ''இதோ... உங்களுக்கு ஒரு கடிதம்'' என்று கவரை அவரிடம் நீட்டினாள்.



''தேங்யூ... காப்பி தயாராகி விட்டதா?'' என்று சொல்லிக் கொண்டே உள்ளே போனார்.

கையில் காப்பியுடன் அவருடைய அறைக்குள் நுழைந்த நிர்மலாவைக் கண் கொட்டாமல் பார்த்தார் வைரமூர்த்தி. அவருடைய பார்வையின் உஷ்ணிப்பைத் தாங்காமல் நிர்மலா தன் பார்வையை வேறு பக்கம் திருப்பினாள். காப்பியை அவர் மேசை மேல் வைத்தாள்.

''மிஸ். நிர்மலா...''

''ம்ம்...''

''என்னை நீ ஏதோ கேக்கணும்னு நினைச்சுக்கிட்டிருக்கே... அப்படித்தானே?''

''அது...'' நிர்மலா தயங்கினாள்.

''நீ கேக்கலாம்... ஆனால் பதில் தருவதும் தராததும் என் விருப்பம்''

''நேற்று 'ஸ்மித்ஸோனியனி'ல் வெடி குண்டு வெடித்ததற்கு நீங்க சொன்ன விளக்கத்தைப் பற்றி ஒரு கேள்வி கேட்க வேண்டும்...''

''அதைப் பத்தியா?... இல்லை இப்போது வந்து விட்டுப் போனானே அந்த மனிதனைப் பத்தியா?''

நிர்மலாவுக்கு எல்லாமே ஒரு கணம் புரிந்து விட்டது போலிருந்தது. 'ஸ்மித்ஸோனியன்' கட்டடத்தில் வெடிகுண்டு வைக்க ஏற்பாடு செய்தது வைரமூர்த்திதான் என்ற எண்ணம் அவள் வயிற்றைப் பிசைந்தது. அவள் முகத் தோற்றம் ஆச்சர்யம், பயம், வெறுப்பு என்ற பலவகை உணர்ச்சிகளை வெளிப்படுத்தின.

வைரமூர்த்தி சட்டென்று எழுந்தார். நிர்மலாவுக்கு முன்னால் வந்து நின்றார். அவளை ஒரு முறை மேலும் கீழுமாகப் பார்த்தார்.

''மிஸ், நிர்மலா... இந்த வெடிகுண்டு சமாசாரம் என்னுடைய சொந்த விஷயம். அதைப் பற்றி நீ எந்தவிதக் கவலையும் பட வேண்டாம். அப்படி நீ தலையிட்டால்...'' முடிக்காமல் அவளை மீண்டும் பார்த்தார். அவருடைய பார்வையில் கனல் தெறித்தது.

நிர்மலாவின் உடல் நடுங்கியது! வந்து விட்டுப் போன மனிதனின் முகத்திலிருந்த நீண்ட வடு கத்திக்குத்தால் ஏற்பட்டிருக்கலாம். அவளுக்குத் தன் முகத்தை நோக்கி ஒரு கூரிய கத்தி பளபளப்பது போல இருந்தது.

தான் சொல்ல வந்ததை நிர்மலா புரிந்து கொண்டாள் என்ற திருப்தியுடன் வைரமூர்த்தி காப்பியை எடுத்துச் சுவைத்தார். நிர்மலா தன்னறைக்குத் திரும்பி நடக்க ஆரம்பித்தாள்.

## 4

நிர்மலா நிலைகுலைந்து உட்கார்ந்து விட்டாள். வைரமூர்த்தி சில நாட்களுக்கு முன் அவளிடம் கொடுத்த வேலையில் பாதி கூட இன்னும் முடியவில்லை. இந்திய சரித்திரத்தில் முக்கிய கட்டமான 1947- 48 ஆண்டுகளில் இந்திய மக்களிடையே இருந்த ஒற்றுமையின்மையைப் பற்றி வைரமூர்த்தி விரிவான கட்டுரை எழுதியிருந்தார். அதைச் சரித்திர ஆராய்ச்சி நூல் ஒன்றின் பகுதியாக வெளியிட நிர்மலாவை விட்டு கம்ப்யூட்டரில் 'டைப்' செய்து வைக்குமாறு சொல்லியிருந்தார். இன்று இன்னும் பத்துப் பக்கங்களாவது முடிக்க வேண்டுமென்ற உற்சாகத்துடன் தான் காலையில் வந்தாள். வைரமூர்த்தியின் அறையில் அவளுக்குக் கிடைத்த பயங்கர எச்சரிக்கை அன்றைய தினத்தை மட்டுமில்லாமல் அவளுடைய வாழ்நாளையே அமைதி இல்லாததாக ஆக்கி விடும் போல் இருந்தது. அவள் மேசையிலிருந்த 'கார்னேஷன்' பூக்கள் அவளைப் பார்த்துக் கேலி செய்வது போல் இருந்தன.

நேராக ஒரு போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் வைரமூர்த்தி, அவருடைய கையாள், அவர்களுக்கும் வெடிகுண்டு விபத்திற்கும் உள்ள தொடர்பு - எல்லாவற்றையுமே கொட்டி விடலாமா என்று நினைத்தாள்.

அப்படிச் செய்வதால் எந்தவிதப் பயனுமில்லை என்று உடனடியாகத் தீர்மானித்தாள். அதற்கு இரண்டு காரணங்கள். எந்தவித ஆதாரமுமில்லாமல் போலீஸாரிடம் புகார் சொன்னால் அவளுக்குத்தான்



''அந்த கண்டக்டர் ஏன் அப்படி ஓடுகிறார்?''
''அதோ, ஸ்டாப்பில் நிற்கும் அவரோட பஸ்ஸை மிஸ் பண்ணிடக் கூடாதேன்னுதான்!''
- செங்குன்றம் ஜெமால்.

தொல்லை ஏற்படும். போலீஸிடம் அவள் போனாள் என்பது தெரிந்தால் வைரமூர்த்தி அவளை உயிருடன் விடுவாரா? அவளுக்குத் துளியும் நம்பிக்கையில்லை. உலகில் தனக்கு யாருமே துணையில்லையோ என்று துக்கம் தொண்டையை அடைத்தது.

அந்த நேரத்தில் ரகுராமன் மேல்மூச்சு வாங்க நிர்மலா இருந்த அறைக்குள் நுழைந்தான்.

''டாக்டர் வைரமூர்த்தி இருக்கிறாரா?''

அவனை ஏறிட்டுப் பார்த்தாள் நிர்மலா.

அவனுடைய அடர்த்தியான கருமயிர் கலைந்து நெற்றியில் விழுந்திருந்தது. அதை அவன் பின்னால் தள்ளி விட்டுக் கொண்டான். உயரம் சுமார் ஐந்தடி பத்தங்குலம். சிவப்புச் சட்டையில் வெள்ளைக் கோடுகள் குறுக்காக ஓடின - ரகுராமனுக்குப் பொருத்தமான கலர்தான் என்று நிர்மலா நினைத்தாள். முப்பது வயதுக்கும் குறைவாகத்தான் இருக்கும்.

''நான் கேட்டது காதில் விழுந்ததா? நிர்மலா?''

ரகுராமனின் குரல் அவசரத்தை உணர்த்தியது.

''யெஸ்... யெஸ்... டாக்டர் வைரமூர்த்தி உள்ளே இருக்கிறார்''

''நான் அவரை உடனே பார்க்க வேண்டுமே.''

''அப்பாயிண்ட்மெண்ட் இருக்கிறதா?''

''இல்லை. ஆனால் நிச்சயம் என்னைப் பார்க்கச் சம்மதிப்பார். போனில் கூப்பிட்டுக் கேளுங்களேன்.'' ரகுராமன் அவளைக் கெஞ்சினானா அல்லது கொஞ்சினானா என்பதை நிர்மலாவால் நிர்ணயிக்க முடியவில்லை.

''உட்காருங்கள்'' என்று உபசரித்து விட்டு போனை எடுத்து வைரமூர்த்தியைக் கேட்டாள்.

''பத்து நிமிஷம் கழித்து வரச் சொல்கிறார்'' - போனைக் கீழே வைத்துக் கொண்டே சொன்னாள்.

தலையாட்டினான் ரகுராமன்.

''காப்பி வேணுமானால் எடுத்துக் கொள்ளுங்கள்.''

''தேங்ஸ்...'' என்ற ரகுராமன் கப்பில் காப்பியை ஊற்றி, கொஞ்சமாகச் சக்கரை போட்டு, பாலில்லாமல் எடுத்துக் கொண்டான்.

மீண்டும் உட்கார்ந்து கொண்டு எதிரிலிருந்த நிர்மலாவைப் பார்த்தான். அவள் வேலை மும்முரத்தில் இருந்தாள்.

ரகுராமன் அந்தப் பல்கலைக் கழகத்தில் பி.எச்.டி. பட்டம் பெறச் சேர்ந்து சுமார் நாலரை ஆண்டுகள் ஆகியிருந்தன. டாக்டர் வைரமூர்த்தியின் ஆராய்ச்சிக் குழுவில் சேர்ந்திருந்தான்.

இந்த நாலரை ஆண்டுகளில் வைரமூர்த்தியுடன் வேலை செய்த செக்ரட்டரிகள் ஆறு பேர். நிர்மலாதான் அதிக மாதங்கள் அங்கு வேலையில் இருக்கிறாள் என ரகுராமன் அறிவான்.

நிர்மலாவுக்கு வயது இருபத்தாறு இருக்கலாம் என்று நினைத்தான். அவள் முடியைக் குட்டையாக வெட்டிக் கொண்டு, கண்ணுக்குக் கவர்ச்சியாக மேற்கத்திய பாணியில் உடை உடுத்திக் கொண்டு சகஜமாகப் பேசிப் பழகியது ரகுராமனின் உள்ளத்தில் பதிந்திருந்தது. பொதுவாக அவள் ஆங்கிலம்தான் பேசுவாள். அன்று ஏனோ தமிழிலேயே அவனிடம் பேசினாள். அவள் பேசிய தமிழின் இனிமையை அவனுடைய அவசரத்திலும் ரகுராமன் கவனிக்கத் தவறவில்லை.

அவள் கம்ப்யூட்டரில் தட்டிக் கொண்டிருந்த சாயலை ரகுராமன் பார்த்தான். அவளுடைய இடதுபுறம் அவன் பக்கமாகத் திரும்பியிருந்தது. நிர்மலாவின் முகம் எவ்வளவு கவர்ச்சியானது என்பதை ரகுராமன் அப்போதுதான் நன்றாகக் கவனித்தான்.

போன் மணி அடித்தது.

நிர்மலா ரிசீவரை எடுத்தாள். பேசி விட்டு, ''உள்ளே வரச் சொல்கிறார்'' என்றாள்.

''தேங்ஸ்... காப்பி நல்லாயிருந்தது'' என்று ஒரு புன்னகையை உதிர்த்து விட்டு ரகுராமன் உள்ளே போனான்.

நிர்மலா அவன் போவதையே கண் கொட்டாமல் பார்த்தாள். 'சட்'டென்று ஓர் எண்ணம்.

'ரகுராமனிடம் டாக்டர் வைரமூர்த்தியைப் பற்றிச் சொன்னால் என்ன? ரகுராமன் உதவி செய்ய மறுக்க மாட்டார் என்பதை அவர் முகத்திலிருந்த புன்னகையே சொல்லி விட்டதே!'

ஆனால்....

இது என்ன? ரகுராமனிடம் வைரமூர்த்தி ஏன் இப்படி குரலை உயர்த்திப் பேசிக் கொண்டிருக்கிறார்?

வார்த்தைகள் தெளிவில்லா விட்டாலும் மூடப்பட்ட கதவுக்கும் வெளியே வைர மூர்த்தியின் உரத்த குரலொலி கேட்டது. அருகில் சென்று ஒட்டுக் கேட்பதா வேண் டாமா? நிர்மலாவின் உள்ளத்தில் கண நேரத் தவிப்பு!

(தொடரும்)

# மூக்கில் தடவி விற்றார்கள்!

**ல**ன்ஸ்ஃபர்ட் ரிச்சர்ட்ஸன் ஒரு மருந்துக் கடை வைத்திருந்தார். மருந்துத் தயாரிப்பில் அவருக்கு இருந்த அபரிமிதமான ஆர்வம் காரணமாக, எந் நேரமும் மருந்துகளின் புதிய கலவைகளைத் தயாரித்துப் பரிசோதனைகள் நிகழ்த்திக் கொண்டிருப்பார். ஒரு நாள் ரிச்சர்ட்ஸனின் மகனுக்குக் கடுமையான ஜலதோஷத்துடன் மூக்கடைப்பு ஏற்பட்டது. லன்ஸ்ஃபர்ட் தம் மகனுக்குத் தாமே மருந்து தயாரித்தார். ஜப்பானில் கண்டுபிடிக்கப்பட்டிருந்த 'மெந்தால்' என்ற மருந்துப் பொருளுடன் கற்பூரமும் யூகலிப்டஸ் தைலமும் கலந்து அவர் உருவாக்கிய களிம்பு, சிறுவன் ஸ்மித்தின் ஜலதோஷத்துக்கு நிவாரணம் அளித்ததோடு, தந்தை லன்ஸ்ஃபர்டின் வாழ்க்கையில் மாபெரும் மாறுதலை ஏற்படுத்தியது.

அமெரிக்காவின் தெற்கு கரோலினா மாநிலத்தில் அன்று ரிச்சர்ட்ஸன் கண்டுபிடித்த மருந்துதான் இன்று நூற்றாண்டு விழாக் காணும் 'விக்ஸ் வேபோரப்'.

விக்ஸை நோயாளியின் நெஞ்சில் தடவிய போது அதிலிருந்த மெந்தால், உடல் சூடு பட்டதும் ஆவியாக மாறி மூக்கடைப்பை நீக்கியது; இதமளித்தது. இத்தகைய நிவாரணியை மருத்துவ உலகம் அது வரை அறிந்திருக்கவில்லையாதலால் விக்ஸுக்கு அமோக வெற்றி. ரிச்சர்ட்ஸன் மேலும் இருபது மருந்துகளை உருவாக்கினார். இவை யாவுமே வீட்டில் வாங்கிப் பயன்படுத்தக்கூடிய நிவாரணிகள். இதற்குப் பிறகு சின்ன மருந்துக் கடை விற்கப்பட்டது. 'லன்ஸ்ஃபர்ட் ரிச்சர்ட்ஸன் மொத்த வியாபார நிறுவனம்' துவங்கப்பட்டது. விக்ஸுக்கு வித்திட்ட ஸ்மித் பெரியவனாகி அப்பாவின் தொழில் வேகமாக வளர உதவினான்.

**வி**க்ஸைப் பிரபலப்படுத்த ஸ்மித் நவீன உத்திகளைக் கையாண்டான். அமெரிக்காவில் விற்பனைப் பிரிவுச் சிப்பந்திகளுக்கு முதன் முதலாகக் கார்களைக் கொடுத்தது ரிச்சர்ட்ஸன் நிறுவனம்தான். இந்தக் கார்கள் ஏணிகளைச் சுமக்கும் வசதியுடன் பிரத்யேகமாக வடிவமைக்கப்பட்டு வாங்கப்பட்டவை. ஆங்காங்கே கார்களை நிறுத்தி, கட்டடங்கள், மரங்கள் மீது ஏணியைச் சாய்த்து ஏறி விளம்பரமும் வியாபார



லன்ஸ்ஃபர்ட் ரிச்சர்ட்ஸன்.



ஏணிகளைச் சுமக்கும் வசதியுடன் கார்கள்...




☛ ஆரம்ப காலத்தில் விக்ஸ் நிறுவனம்...

மும் செய்தனர் சிப்பந்திகள்!

முதல் உலக யுத்தத்தின் போது அமெரிக்காவில் ஃப்ளூ ஜுரம் பரவியது. அதுவரை 6,00,000 டாலர்கள் வருடாந்திர விற்பனையைக் கண்டிருந்த விக்ஸ் மூன்று மில்லியன் டாலர் விற்பனையைத் தொட்டது!

**1920** இல் முதன் முதலாக ஏற்றுமதியான விக்ஸ், இந்தியாவை வந்தடைந்தது 1950 இல். இந்தியாவில் ஏற்கெனவே பல களிம்புகளும் நிவாரணிகளும் புழக்கத்தில் இருந்தன. மிகச் சாமர்த்தியமாகத் திட்டமிட்டு மக்களிடம் விக்ஸுக்கென்று ஒரு தனியிடத்தைப் பிடித்தார்கள்.

விக்ஸ், குழந்தைகளுக்கு நிவாரணம் அளிப்பதாக விளம்பரம் செய்து, தாய்மார்களின் கருத்தைக் கவர்ந்தார்கள்.

உடல் வலி, தலை வலி நிவாரணத்துக்கு உத்தரவாதம் அளித்த பிற களிம்புகளுடன் போட்டி போடாமல், ஜலதோஷ நிவாரணியாக மட்டுமே விக்ஸ் சித்திரிக்கப்பட்டது.

மேலை நாடுகளில் பனிக் காலத்துக்கு இன்றியமையாததென விளம்பரப்படுத்திய விக்ஸை இந்தியச் சூழலுக்கு ஏற்ப 'பருவ மழைக் காலத்தில் அவசியமான துணைவன்' என்று மாற்றி விளம்பரம் செய்தார்கள். மழையில் சொட்டச் சொட்ட நனைந்து, தும்மும் குழந்தைகள், அம்மாவின் கை 'விக்ஸா'ல் நிவாரணம் பெறுவதை விளம்பரப் படங்களில் காட்டினார்கள். தாய்மார்களின் இதயத்தைத் தொட்டதோடு, விக்ஸ் எப்படி ஆவியாக மாறி இயங்குகிறது என்பதை வரைபடமாகக் காட்டி அறிவுபூர்வமாகவும் நம்பிக்கையூட்டினார்கள்.

விக்ஸின் சில விளம்பரப் படங்கள் ஐந்து நிமிடங்களுக்குக் கூட நீடித்தன. ''அந்தக் காலத்தில், விக்ஸ் விளம்பரம் திரையிடுகிறார்களா என்பதைக் கண்காணிக்க, சில நாட்களில் மூன்று சினிமாக் காட்சிகள் கூடப் பார்த்திருக்கிறோம்'' என்கிறார் ப்ராக்டர் அண்ட் காம்பிள் நிறுவன எக்ஸிகியூடிவ் வைஸ் பிரெசிடன்ட் பரத் படேல். ஆரம்ப நாட்களில், இவர் கிராமம் கிராமமாகப் போய் விவசாயிகளின் மூக்கில் விக்ஸைத் தடவிக் காட்டி, விளக்கி விற்பனையைப் பெருக்க உதவியதுமுண்டு! ஒவ்வோர் உயர் அதிகாரியும் இத்தகைய பிரசாரத்தில் ஈடுபடுத்தப்பட்டார்.

எளியவர்கள் இரண்டு ரூபாய் கொடுத்து ஒரு விக்ஸ் பாட்டில் வாங்க முடியாது என்பதால், ஐந்து கிராம் விக்ஸ் டப்பி (ஐம்பது பைசாவுக்கு) அறிமுகப்படுத்தப்பட்டது. அமோக வெற்றி! மற்ற நாடுகளிலும் இந்த 'ஹரி டப்பி' பிரபலமாகியது.

அக் காலத்தில் யாரும் துணியாத மற்றொரு வகையிலும் விக்ஸுக்கு விளம்பரம் செய்தார்கள். 'விக்ஸ் வேண்டும்' என்று கேட்டு எழுதும் முதல் இருபதாயிரம் பேருக்கு அதனை இலவசமாக அனுப்பி வைப்பதாக இலங்கை வானொலியில் அறிவித்துச் செயல்படுத்தினார்கள்.

ரிச்சர்ட்ஸன் மெர்ரல், ரிச்சர்ட்ஸன் ஹிந்துஸ்தான், பிராக்டர் அண்ட் காம்பிள் (இன்றைய உரிமையாளர்கள்) என விக்ஸின் நிர்வாகம் கைமாறிய போதும் விற்பனை மற்றும் விளம்பர உத்திகளில் செலுத்தப்படும் கவனம் குறையாமல் பார்த்துக் கொண்டார்கள்.

**நூ**றாண்டுகளுக்கு முன் ரிச்சர்ட்ஸன் 'புதிதாகக் கண்டுபிடித்த' களிம்புக்கான குறிப்பு நமது ஆயுர்வேத நூல்களில் ஏற்கெனவே உள்ளதுதான் என்பது உணரப்பட்டதும், ஆயுர்வேத மூலிகைகள் ஆராய்ச்சியிலும் கவனம் செலுத்த ஆரம்பித்தது, விக்ஸ் நிறுவனம். 'கால்வே'யில், இவர்களுக்குச் சொந்தமான ஆயுர்வேத ஆராய்ச்சி மையமே இருக்கிறது.

காலம் மாறி விட்டது; உபயோகிப்பாளர்களின் மனப்பான்மை, வாங்கும் திறன் எல்லாம் மாறி விட்டன. போட்டியாகப் பல களிம்புகள் சந்தைக்கு வந்து விட்டன; அப்படியும் விக்ஸுக்கு மவுசு குறையவில்லையே...! இதன் ரகசியம் என்ன என்று கேட்டால்...

''இந்த நிறுவனத்தில் உள்ள ஒவ்வோர் ஊழியருக்கும் விக்ஸின் பேரில் உள்ள நம்பிக்கைதான் காரணமாக இருக்க முடியும்'' என்கிறார் பிராக்டர் அண்ட் காம்பிள் நிறுவனத் தலைவர் குருசரண் தாஸ்.

**– சோனியா மெஹ்தா**

# பக்கத்து வீட்டு இளைஞர்கள்

அப்பொழுதுதான் கண் அசந்தேன்.

பக்கத்து வீட்டிலிருந்து புறப்பட்ட 'ஹோ' என்ற இரைச்சல் 'திக்'கென விழிக்க வைத்தது.

''பச், என்னங்க இது?'' என்று நொந்து கொண்டாள் என் மனைவி பானு.

நான் ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தேன்.

பக்கத்து வீட்டு ஹாலில் ட்யூப் லைட் பளீரிட்டுக் கொண்டிருந்தது.

மேற்கத்திய இசையும், அதற்கேற்றது போல் கைகளைத் தட்டியபடி தங்களுக்குள் ஏதோ பேசிச் சிரித்துக் கொண்டிருந்த இளைஞர்களின் குரல்களுமாக அந்தத் தெருவே கலகலக்கும் சப்தம் காதைப் பிளந்தது.

சுவர்க் கடிகாரத்தில் நேரத்தைப் பார்த்தேன்.

மணி பதினொன்றரை.

''நல்ல இடத்துல வீடு பார்த்தீங்க போங்க. ராத்திரி தூங்க முடியாம இரைச்சல். காலையிலே எழுந்தால் கண்ணெல்லாம் எரியுது'' என்று அலுத்துக் கொண்டாள் பானு.

போன வாரம்தான் இந்த வீட்டிற்குக் குடி வந்தோம். என் ஆபீஸ் அருகிலேயே இருப்பதாலும், கடைகளும், பஸ் ஸ்டாப்பும் பக்கத்துலே இருப்பதாலும் இந்த இடம் பிடித்துப் போனது.

வாடகையும் முந்நூறு ரூபாய்தான். ஒரு ஹால், இரண்டு பெட்ரூம், ஒரு கிச்சன் என்று வீடு எங்களுக்குப் போதுமானதாகவும், திருப்தியாகவும் இருந்தது.

இத்தனை குறைந்த வாடகையில், இவ்வளவு பெரிய வீடு கிடைத்த மகிழ்ச்சி இரண்டு நாள் கூட நீடிக்கவில்லை.

அதே தெருவில் குடியிருக்கும் ஒருவர் தாமாகவே வலிய வந்து என்னிடம் பேசினார்.

''என்ன சார், புதுசாக் குடி வந்திருக்கீங்க போலிருக்கு...''

''ஆமாம் சார்'' என்று என்னை அறிமுகப்படுத்திக் கொண்டேன்.

''சார், இந்த வீட்டுல ஒரே பிரச்னை ஆச்சே. குடி வந்தவங்க யாரும் ஆறு மாதம் கூட நீடிக்க மாட்டாங்களே...''

''ஏன் சார்? ஏதாவது பேய், பூதம்னு...'' என்றேன் பயத்துடன்.

''சேச்சே, அதெல்லாம் இல்லை சார். பக்கத்து வீட்டுல நாலு தடிப் பசங்க தங்கியிருக்காங்க. பாச்சலர்ஸ். பிரம்மச்சாரி கள்ளாலே கேட்க வேண்டாமே. ராத்திரி பன்னிரண்டு மணி, ஒரு மணி வரை ஒரே பாட்டும், கூத்தும்தான்!''

''ப்பூ, இதுதானா சார் பிரச்னை'' என்ற என்னை ஏளனமாகப் பார்த்தார்.

''ம், ஒரு இரண்டு நாள் போனால் நீங்களே என்னைத் தேடி வந்து அழப் போறீங்க...'' என்றபடி விருட்டென்று கிளம்பி விட்டார்.

அவர் சொன்னது நூற்றுக்கு நூறு உண்மை என்பது இப்போது புரிந்தது.

ராத்திரி ஒரு மணி வரை அரட்டையடித்து விட்டுக் காலையில் எட்டு மணி, ஒன்பது மணிக்குத்தான் எழுந்திருக்கிறார்கள் அவர்கள்.

ஆனால் எனக்கோ தொழிற்சாலையில் வேலை. காலையில் ஆறு மணிக்கே ஷிப்டுக்குக் கிளம்ப வேண்டும் வீட்டை விட்டு.

இவ்வளவு பெரிய வீடு இத்தனை குறைந்த வாடகையில் கிடைத்த காரணம் இப்போதுதான் புரிந்தது எனக்கு.

சரி, அந்த இளைஞர்கள் தங்கியிருக்கும் வீட்டுச் சொந்தக்காரரிடம் சொல்லலாம் என்று விசாரித்தால், அது அந்த நால்வரில் ஓர் இளைஞனின் சொந்த வீடாக இருந்தது.

நானும் அவர்கள் வயதைக் கடந்து வந்தவன்தான்.

இந்த வயது இளைஞர்களிடம் கோபமாகப் பேசினால் கஷ்டம் நமக்குத்தான் என்பது புரிந்தது. குழந்தை, குடும்பம் என்ற பொறுப்புகள் இல்லாத காட்டாற்றுப் பருவத்தினரிடம் பக்குவமாக முயன்றால் தான் வெற்றி பெற முடியும்.

போலீசில் முன்பே ஒருவர் புகார் கொடுத்ததாகவும் அந்த நான்கு இளைஞர்களில் ஒருவனின் மாமா அரசியலில் பெரும்புள்ளி என்பதால் போலீஸ் கண்டு கொள்ளவில்லை என்றும் தெருவாசிகள் மூலம் கேள்விப்பட்டேன்.

இந்த மாதிரியான வசதியான இடத்தில் உள்ள வீட்டையும் உடனே காலி பண்ண மனசில்லை. தேடினால் மட்டும் வாடகைக்கு வீடு உடனே கிடைத்து விடுகிறதா, என்ன?

யோசித்தேன்!

கிருஷ்ணா

அடுத்த நாள் கிருஷ்ண ஜெயந்தி. காலை ஷிப்ட் முடிந்து மூன்று மணிக்கு வீடு திரும்பினேன்.

மாலை ஐந்து மணிக்கு அந்த இளைஞர் பட்டாளம் திரும்பியது.

''ஹலோ.. ஃப்ரெண்ட்ஸ்'' என்று நானாகவே சென்று வீட்டுக்குள் நுழைந்தேன்.

பேண்ட்டை விட்டு லுங்கிக்கு மாறிக் கொண்டிருந்தவர்கள் என் வரவு கண்டு குழம்பினர்.

''என் பேரு பாஸ்கர். பக்கத்து வீட்ல புதுசாக் குடி வந்திருக்கேன்.''

''வாங்க சார். டேய் குமார், சேரிலிருந்து சட்டையை எடுடா. சார் உட்காருங்க...'' என்றான் ஒருவன்.

''மரியாதை தெரிந்தவர்கள்தான், பரவாயில்லை..'' என்று நினைத்துக் கொண்டேன்.

''இன்னிக்கு கிருஷ்ண ஜெயந்தி. நீங்க நாலு பேரும் என் வீட்டுக்கு வந்து சாப்பிடணும்.''

பிரமிப்புடன் என்னைப் பார்த்தனர் நால்வரும்.

''பாவம் நீங்க. ஹோட்டல் சாப்பாடு சாப்பிட்டு நாக்குச் செத்துப் போயிருப்பீங்க. நானும் எட்டு வருஷம் பாச்சலர் வாழ்க்கையிலே கஷ்டப்பட்டவன்தான். அதனால தான் இந்த அழைப்பு.''

''சார்...''

''பயப்படாதீங்க. என் மனைவி சமையலில் நளன் மாதிரி. அதாவது சேலை கட்டிய நளன்!'' என்றதும் நால்வரும் சிரித்து விட்டனர்.

''நன்றி சார். நிச்சயம், வர்றோம்'' என்றனர்.

அடுத்த ஒரு மணி நேரத்தில் நால்வரும் என் வீட்டில் ஆஜராயினர்.

பண்டிகை பதார்த்தங்களையும் சாப்பாட்டையும் ஒரு கை பார்த்தனர்.

''சார், உங்க மனைவி ரொம்ப நல்லாப்





## அருள்வாக்கு

பண விஷயத்தில் பெரும்பாலும் நாம் கணக்காகவே இருக்கிறோம் - இதை நமக்கு யாரும் சொல்லித் தர வேண்டியதில்லை. ஒரு வஸ்துவுக்கு அதன் விலையை விட ஒரு பைசா அதிகம் கொடுப்போமா? மாட்டோம். பணத்தில் கணக்காக இருப்பது உண்மை. ஆனாலும் பணத்தைக் கொடுத்துப் பல வஸ்துக்களை வாங்குகிறோமே, அவற்றில்தான் இத்தனை வஸ்துக்கள் நமக்குப் போதும் என்று கணக்காக இருக்க மாட்டேன் என்கிறோம். நாம் நிம்மதியாக உயிர் வாழ்வதற்குச் சொற்ப வஸ்துக்கள் போதும். இந்த வஸ்துக்களுக்குத் தேவைப்படும் பணத்தை மட்டுமே நாம் சம்பாதனம் செய்வதென்றால், இப்போது போல் ஆலாப் பறக்கவே வேண்டாம் - தேசம் விட்டு, கண்டம் விட்டு, எங்கெங்கோ போய் ஆசாரங்களை விட வேண்டாம். அநாவசியமான வஸ்துக்களுக்காகவே கணக்கில்லாமல் சம்பாதிக்க வேண்டியிருக்கிறது. அதற்காக ஆத்ம விசாரத்துக்கும் ஈசுவர தியானத்துக்கும் பரோபகாரத்துக்கும் செலவிட வேண்டிய காலத்தை எல்லாமும் கணக்கில்லாமல் விரயம் செய்ய வேண்டியிருக்கிறது. இரண்டு தினுசில் கால விரயம் : முதலில் சம்பாதிப்பதில் கால விரயம், அப்புறம் வேண்டாத வஸ்துக்களைத் தேடித் தேடிப் போவதில் கால விரயம். நிகர விளைவாகவோ ஆத்ம சாந்தியைக் குலைத்துக் கொள்கிறோம். திருப்தியே இல்லாமல் ஆசை வேகத்திலும் பல சந்தர்ப்பங்களில் ஆசை நிறைவேறாத ஏமாற்றத்திலும் மொத்துப்பட்டு அவஸ்தைப்படுகிறோம்.

நாம் உயிர் வாழ இந்த வஸ்து அவசியம்தானா என்று பார்த்துக் கணக்காகச் செலவு செய்வதே உண்மையில் ''கணக்காயிருப்பதாகும்''. வேண்டாத வஸ்துக்களுக்குப் பேரம் பண்ணி, சாமர்த்தியமாக விலை பேசி அதற்கு ஒரு பைசாக் கூட அதிகம் கொடுக்கவில்லை என்பதால் கணக்காயிருந்ததாகாது.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

பண்ணியிருக்காங்க...''

''ஆமாம் சார். சிஸ்டர் கைக்கு மோதிரமே போடலாம்.''

''அது மட்டுமில்லே சார். இந்தத் தெருவுல இத்தனை நாள் இருக்கோம். யாரும் எங்களை இந்த மாதிரி பண்டிகை நாட்களில் கூப்பிட்டதே கிடையாது.''

''ஏன்னு யோசிச்சீங்களா?'' என்றேன் நடுவில் புகுந்து.

''தெரியலே சார். எங்களைக் கண்டாலே முகத்தைத் திருப்பிக்கிறாங்க. சிடுமூஞ்சிங்க...''

''அதுக்குக் காரணம் நீங்களாகவும் ஏன் இருக்கக் கூடாது?''

''சார்...''

''உங்களைக் குற்றம் சொல்றேன்னு எடுத்துக்காதீங்க. நான் புதுசாக் கல்யாணம் ஆனவன்றதுனாலே, பிரம்மச்சரிய வாழ்க்கையின் சந்தோஷங்களை இன்னும் மறக்கலே. ஆனால் எல்லோரும் அப்படி நினைக்க முடியாது இல்லையா?''

''எங்க வீட்டுல நாங்க சுதந்திரமா இருக்கக் கூடாதா சார்?''

''தாராளமாய் இருக்கலாம். ஆனால் சுதந்திரங்கிறது என்ன தெரியுமா? அடுத்தவங்களுக்கு நம்ம செயல் மூலமாத் தொந்தரவு ஏற்படாதபடி காரியங்களை நாம செய்யறதுதான்...'' என்று சொல்லி நிறுத்தினேன்.

''பானு, பாயசம் போடு, எல்லோருக்கும்...'' என்று உபசரித்தேன்.

''இளைஞர்கள் என்றாலே இப்படித்தான்னு' மற்றவங்களை முகத்தைச் சுளிக்க வைக்காதீங்க. இதை நான் அறிவுரையாச் சொல்லலே. உங்களுக்குக் கெட்ட பெயர் வந்துடக் கூடாதேங்கிற நல்ல எண்ணத்தில சொல்றேன்.''

விடைபெற்றனர் நால்வரும்.

அன்று இரவு அவர்களின் ஆட்டம், பாட்டமும், இரைச்சலும் கேட்கவில்லை.

''எப்படீங்க இந்த ஐடியா வந்தது?''

''பானு, இந்தத் தெருவாசிகள் அவர்களிடமிருந்து ஒதுங்கி ஒதுங்கிப் போறதுனாலேதான் யார் பேச்சையும் அவங்க காதுலேயே போட்டுக்கலே. எந்த அறிவுரையுமே மூணாவது மனுஷனா இருந்து சொன்னால் யார் மனசிலுமே ஏறாது. அதையே அவங்க மேலே கரிசனம் காட்டி, உண்மையான அக்கறையோட சொன்னால் உடனே பதியும் உள்ளத்துல.''

''பெரிய ஆளுதான் நீங்க'' என்று பெருமையுடன் என்னைப் பார்த்தாள் பானு.

ஆனால் ஒரு வாரத்துக்குள் வீட்டுக்காரர் வந்து வாடகையைக் கணிசமாக ஏற்றிவிட்டதுதான், துரதிர்ஷ்டம்!




பரிசு

ரூ. 40,000

# கல்கி பொன்விழா நாவல் போட்டி

எழுத்தாளர்களின் ஏகோபித்த வேண்டுகோளுக்கு இணங்க, கல்கி பொன் விழா நாவல் போட்டியின் முடிவு தேதி, அக்டோபர் 31, 1991 வரை நீட்டிக்கப்பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| சரித்திர நாவலுக்குப் பரிசு (சுமார் 52 இதழ்கள்) | ரூ. | 20,000/- |
| சமூக நாவலுக்குப் பரிசு (சுமார் 26 இதழ்கள்) | ரூ. | 10,000/- |
| மர்ம நாவலுக்குப் பரிசு (சுமார் 12 இதழ்கள்) | ரூ. | 5,000/- |
| விஞ்ஞான நாவலுக்குப் பரிசு (சுமார் 12 இதழ்கள்) | ரூ. | 5,000/- |

முடிவு தேதி : அக்டோபர் 31, 1991

- இதற்கடுத்த ஒன்பது மாதங்களில் நாவல்களின் பரிசீலனை முடிந்து, கல்கி பொன் விழாச் சிறப்பிதழில் முடிவு வெளியாகும். பரிசு பெற்ற நாவல்களுள் ஒன்று அதே சிறப்பிதழில் ஆரம்பமாகும். அதாவது 1992 ஆகஸ்டு முதல் வார இதழ்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படும் இதர நாவல்களுக்கு வழக்கமான சன்மானம் அளிக்கப்படும்.
- நடுவர் குழு நாவல்களைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய நாவல்களைத் தேர்ந்தெடுக்கும்.
- கல்கி பொன் விழா நாவல் போட்டிக்கு அனுப்பப்படுவதாகத் தெளிவாகக் குறிப்பிடுதல் அவசியம்.
- ஒவ்வொரு வாரமும் படத்துடன் சேர்த்துக் கல்கியில் 4 - 5 பக்கங்களுக்கு மேற்படாதபடி அத்தியாயங்களின் அளவை நிர்ணயிப்பது நல்லது.
- கடிதப் போக்குவரத்து கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத நாவல்களைத் திரும்பப் பெற போதிய அளவு தபால் தலைகள் இணைக்க வேண்டும்.
- அப்படித் திருப்பி அனுப்பவே அவசியம் நேராதபடி அற்புதமான நாவல்களை எழுதி அனுப்பிக் கல்கி பொன் விழா ஆண்டினைச் சிறப்பிக்குமாறு எழுத்தாளர் பெருமக்களை வேண்டுகிறோம்.

- ஆசிரியர், கல்கி, சென்னை - 600 032.

## வளம் பெற வாருங்கள்!

**அனுபவம் மிக்கவர்களின் துணையுடன் வளர்ச்சிப் பாதையில் அடியெடுத்து வையுங்கள்.**

# ஸ்ரீராம் சிட்ஸ் அளிக்கும் 10-நாள் விஜயதசமி விழா!

**பரபரப்பூட்டும் போட்டிகள்! மனங்கவர் பரிசுகள்!**

உயரும் விலைவாசிகள், பணவீக்கம், பெருகிக் கொண்டே போகும் வங்கி வட்டி விகிதங்கள்..

சமாளிக்க வழியே இல்லையா? ஏன் இல்லை? இதோ உங்கள் முன்னே ஸ்ரீராம் சிட்ஸ். எதிர்பாராமல் ஏற்படக்கூடிய வருங்காலப் பிரச்னைகளிலிருந்து உங்களை மீட்டுக் கொள்ள ஒரு பொன்னான வாய்ப்பு.

3,50,000 பேர் பங்கு பெற்றுள்ள மகத்தான மக்கள் இயக்கம் அது. அதில் நீங்களும் ஒருவராக இடம் பெற உதவுவதற்காகவே இந்த 10 நாள் விஜயதசமி ஸ்ரீராம் விழா.

எல்லா ஸ்ரீராம் அலுவலகங்களிலும் உங்களுக்கு எதிர்பாராத பரிசுகள் காத்திருக்கின்றன. ஒவ்வொரு நாளும் போட்டிகள். ஒவ்வொரு நாளும் பரிசுகள். இந்த 10 நாட்களில் நீங்கள் வெல்லுவதற்காக மொத்தம் 1710 பரிசுகள்.

வென்றிடுவீர் பரிசுகளை, சேர்ந்திடுவீர் ஸ்ரீராம் சிட்டில். அது பல வகையான பிரச்னைகளுக்கும் தீர்வு காண உதவும் நிறுவனம்.

ரூ.75,000 வரை மதிப்புள்ள சீட்டுகளை எடுப்பவர்களுக்கு பொதுத்துறை, தனியார் துறை, அரசு அல்லது அங்கீகரிக்கப்பட்டுள்ள நிறுவனங்களில் பணியாற்றும் 3 பேர் உத்திரவாதம் அளித்தாலே போதும். வேலையிலிருக்கும் பெண் சந்தாதாரர் ரூ.15,000 வரை மதிப்புள்ள சீட்டுகளை எடுக்கும்போது, அவருடைய கணவருடைய உத்திரவாதமே போதுமானது.

| | சீட்டின் மதிப்பு | சந்தாதாரர் பரிசு! |
|---|---|---|
| 1. | 200 × 40 = 8,000 | டிப்ளோமட் மெலமைன் கரி பௌல் |
| 2. | 250 × 40 = 10,000 | 5 கிராம் வெள்ளிப் பதக்கம் |
| 3. | 500 × 30 = 15,000 | விட்வோ பேக்கிங் டிஷ் |
| 4. | 625 × 40 = 25,000 | ஹால்மார்க் ஸ்டெயின்லெஸ் மல்டிபர்ப்பஸ் ஃப்ரை பான் |
| 5. | 500 × 60 =* 30,000 | காளி ரவுண்ட் மீல்ஸ் ப்ளேட் |
| 6. | 1,000 × 50 = 50,000 | காளி ஃப்ரெஞ்ச் ஃப்ரை |
| 7. | 1,250 × 60 = 75,000 | பிரிஜ 2.5 லிட்டர் குக்கர் |
| 8. | 1,000 × 100<br>2,500 × 40 = 1,00,000 | ஹால்மார்க் ஸ்டீ பான் |
| 9. | 4,000 × 50 = 2,00,000 | 25 கிராம் × 2 வெள்ளிப் பதக்கங்கள் |
| 10. | 10,000 × 30 = 3,00,000 | 2 கிராம் தங்கக் காசு |
| 11. | 20,000 × 50 = 10,00,000 | 8 கிராம் தங்கக்காசு |

* நுழைவுக்கட்டணம் தனி

| அறிமுகப்படுத்துவோர் பரிசு! |
|---|
| 1. காளி ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் டிரே — 2 |
| 2. ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் சர்வீஸ் பௌல் (சிறியது) |
| 3. ஏசியன் ஃபுட் ஃப்ரெஷ் பௌல் |
| 4. ஏசியன் 'மானர்க்' வாட்டர் ஜக் |
| 5. காளி மில்க் டம்ளர்கள் — 2 |
| 6. காளி ஆப்பிள் பௌல், மூடியுடன் |
| 7. ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் சர்வீஸ் பௌல் (பெரியது) |
| 8. மில்டன் கூல் கெக் — 2.5 லிட்டர் |
| 9. 20 கிராம் வெள்ளிப் பதக்கம் |
| 10. 25 கிராம் வெள்ளிப் பதக்கம் |
| 11. மில்டன் மார்க்கோபோலோ ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் வாக்யூம் ஃப்ளாஸ்க் |

**ALL INDIA DEPOSIT MOBILISATION DRIVE TILL 31-10-91.**

**போட்டிகளும் பரிசுகளும்**

**இணைந்து வழங்குவோர்: ஸ்ரீலெபட் ஜாடிகள் & பாட்டில்கள்**

# வாரம் தவறாமல் நாலு சினிமா!


சாந்தாராம்

செங்கல்பட்டிலிருந்து ரயிலில் சென்னை வந்து போக உதவிய சீசன் டிக்கெட்தான் பின்னால் டைரக்ஷன் துறையிலும் எனக்கு சீசன் டிக்கெட்டைப் பெற்றுத் தந்தது என்றால் நம்புவது சிரமமாக இருக்கும்.

செங்கல்பட்டுதான் என் ஊர். பள்ளிப் படிப்பு அங்கேதான். நாலாவது ஃபாரம். சென்னைக் கல்லூரிகளில் படிக்கும் மாணவர்கள் சீசன் டிக்கெட் வைத்திருப்பார்கள். சனி, ஞாயிறுகளில் அந்த நண்பர்களில் ஒருவனது சீசன் டிக்கெட்டைக் கேட்டு வாங்கிக் கொண்டு சென்னை வந்து திரும்புவேன்.

''டேய், மாட்டிக்கப் போறே!'' என்று நண்பர்கள் எச்சரித்த பிறகுதான் கொடுப்பார்கள். நான் செய்வது தவறு என்று எனக்குத் தெரிந்தும் இருந்தது. ஆனால் அதையும் மீறி என்னை ஈர்த்தது, சென்னையல்ல, அதிலிருந்த சினிமா தியேட்டர்கள்; அவற்றில் ஓடிய சிறந்த படங்கள். சாந்தாராம், பிமல்ராய், ராஜ்கபூர் போன்ற உயர்ந்த டைரக்டர்கள், அதேபோல், மேல் நாட்டின் ஹிட்ச்காக், ஸிஸில் பி டெமில் போன்றவர்கள் என்னைக் கவர்ந்து தப்புச் செய்ய வைத்தார்கள்! என்னால் படம் பார்க்காமல் இருக்க முடியவில்லை. ரயில் கட்டணத்தை மிச்சம் பிடித்தால் அதில் மேலும் இரண்டு, மூன்று சினிமா பார்க்கலாமே!

இந்த நாட்கள் போல அன்று சினிமா கலையைப் போதிக்கக் கல்லூரி கிடையாது. கட்டிப் போட்டு வைப்பது போல் கதை கூறும் உத்தி, அதற்கு வடிவம் தரும் வசனம், உயிரூட்டும் நடிப்பு, மெருகேற்றும் டைரக்ஷன், அதற்கு உறுதுணையாக நிற்கும் காமிராவின் ஒளிப்பதிவு முதலிய அம்சங்களை ஒவ்வொரு படத்தைப் பார்க்கும் போதும் தனித்தனியே பிரித்தெடுத்து நுணுக்கமாக ரசித்து மகிழ்வேன். ஓர் உதாரணம் சொல்கிறேன் :

உங்களில் பலர் 'ஜனக் ஜனக் பாயல் பாஜே' என்ற சாந்தாராமின் படம் பார்த்திருக்கக்கூடும். அதில் பிருந்தாவன் தோட்ட நடனக் காட்சியில் ஒரு ஷாட். முதலில் பொங்குபுனலில் நீர் இராது. சந்தியா டான்ஸ் மூவ்மெண்ட்டுடன் வருவார். 'என்னடா ஒரே ஷாட் இப்படி நீளுதே' என்று எண்ணும் போது பவுண்டன் நீர் பீய்ச்சும். அதுவும் சற்று அலுக்கும் போது தண்ணீர் வண்ணத்தில் வரும். வண்ணம் மாறும். ஒரே ஷாட்டில் இத்தனை வேறுபாடுகள். பவுண்டன் அருகே நடனமாடச் செய்து, படம் பிடிப்பது சாதாரணம். ஆனால் அந்த பவுண்டனையே உணர்ச்சி காட்டி நடிக்க வைத்தது சாந்தாராமுக்கே கைவந்த கலை!

இதுபோன்ற பெரிய டைரக்டர்களின் படங்களைத்தான் நான் பார்ப்பேன். சாமானிய, சராசரி படங்களை ஒதுக்கி விடுவேன். நுணுக்கங்களைப் பகுதி பகுதியாக ரசிப்பேன். ஒட்டுமொத்தமாக 'நன்றாயிருந்தது' என்று திருப்திப்பட்டுவிட மாட்டேன்.

'ஏன் இப்படி இருந்தேன்' என்று கேட்டால் எனக்குச் சொல்லத் தெரியாது. என் இயல்பு அதுவாக இருந்தது. ஆக, நான் ஏகலைவனாக இருந்து பல குருமார்களிடம் கற்றுக் கொண்டேன் என்பதே உண்மை. இதற்காகத்தான் நான் சட்டத்தையும் மீறத் துணிந்தது!

''ஸ்ரீதர் அடிக்கடி சினிமா பார்க்க மெட்ராஸ் போறான் ஸார்!'' - இது பள்ளிக்கூடத்தில் மாணவர்களால் ஆசிரியர்களிடையே பரப்பப்பட்ட செய்தி. ஒருநாள் ஓர் ஆசிரியர் என் காதைப் பிடித்துக் கொண்டார். ''ஏண்டா! வாரம் தவறாம நாலு சினிமா பார்க்கிறியாமே?''

''ஸார்! ஸார்! காதை விடுங்க ஸார்! நோவுது ஸார்!'' - நான் மேலும் கடுமையான தண்டனையை எதிர்நோக்கி அதிலிருந்து தப்ப நெளிந்தேன்.

''ஏண்டா! இவ்வளவு சினிமா பார்க்கிறே; பெரிய்ய டைரக்டரா வரப் போறதா நெனைப்பா? சொல்ல முடியாது; நீ நடத்திக் காட்டினாலும் காட்டுவே!''

சினிமா தியேட்டரில் இடைவேளையின் போது ஐஸ்கிரீம் சாப்பிடுவது போலிருந்தது எனக்கு. அப்படி அவர் ஆசி வழங்கியதற்கும் ஒரு பின்னணி உண்டு.

ஆங்கில மீடியத்தில் நான் இரண்டாவது ஃபாரம் படிக்கும் போது எனக்குத் துணைப்


பிமல் ராய்


ஹிட்ச்காக்

பாடமாக இருந்த புத்தகத்தில் இருந்த கதைகளுள் ஒன்று ஹேம்லட். ஒரு சில பக்கங்களில் சுருக்கமாக ஆங்கிலத்தில் இருந்த அதை, தமிழிலே மூன்று மணி நேர நாடகமாக எழுதினேன். நானே டைரக்ட் செய்து, ஹாம்லெட்டாக நடிக்கவும் செய்தேன். அதன் பிறகு பல பள்ளி நாடகங்கள் நடத்தினேன்.

அந்த நாளில் ரொம்பப் பிரபலமாக இருந்த வசனகர்த்தா இளங்கோவன். அவர், நான் படித்த அதே பள்ளியில் படித்தவர்! ஒரு சமயம், ''இந்த ஸ்ரீதர் எதிர்காலத்தில் இன்னொரு இளங்கோவனாக மலர்வான்!'' என்று என் நாடகத்தைப் பார்த்துவிட்டு மேடையிலேயே கூறிப் பாராட்டினார்கள். சிறுவனாகிய எனக்கு அன்று எவ்வளவு ஊக்கமும் உற்சாகமும் ஏற்பட் டிருக்கும்! யோசித்துப் பாருங்கள்!

இவையெல்லாம்தான் என்னைச் சினிமாக் கோட்டையின் கதவுகளைத் தட்ட வைத்தவை. இப்போது டைரக்ஷன் செய்கிற வாய்ப்பும் கிடைத்து விட்டது. என் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை என்றாலும் பொறுப்பும் கவலையும் கூடவே வந்து சேர்ந்தன.

கல்யாணப் பரிசு கதைக்கு ஏற்ற ஹீரோ ஜெமினி கணேசன்தான் என்று முடிவாகியது. இப்போது போல ஹீரோவுக்கு ஏற்பக் கதை பின்னும் விவகாரம் அந்த நாளில் இல்லை. பி. ஆர். பந்துலு படம் ஒன்றில் நடனமாடிய சரோஜாதேவி, முக பாவங்களை நன்கு வெளிப்படுத்திய காரணத்தால் அவரை இளம் கதாநாயகியாக நடிக்க வைப்பது என்றும் தீர்மானித்து விட்டோம். இன்னொரு பெண் பாத்திரத்துக்கு ராஜசுலோசனாவை 'புக்' செய்தோம். ஆனால் விதி அல்லது துரதிர்ஷ்டம் அல்லது ஜாதக பலன் என்று ஏதோ ஒன்று அவர் விஷயத்தில் விளையாடி விட்டது! அவருக்குக் கிடைத்திருக்க வேண்டிய பெரும் புகழ் அவர் கைநழுவிப் போய்விட்டது!

நான் ஒரு காரியமாக பம்பாய் போயிருந்த போது, சென்னையிலிருந்து ஒரு ஃபோன் : ''ராஜசுலோசனா ஓர் ஒப்பந்த ஃபாரம் வைத்திருக்கிறாராம். அதில் கையெழுத்துப் போடச் சொல்கிறார்.''

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது.

''இது என்ன? நம் படத்தில் அவர் நடிக்கிறார். ஊதியம் தரப் போவது நாம். நம்முடைய காண்ட்ராக்டில் அல்லவா அவர் கையெழுத்துப் போட வேண்டும்? வேண்டாம் விட்டு விடுங்கள்!'' என்று சொல்லி விட்டேன்.

**டைரக்டர் ஸ்ரீதர்**



ராஜ்கபூர்



ஸிஸில் பி டெமில்

அவர் இடத்தில் விஜயகுமாரி ஒப்பந்தமானார்! கல்யாணப் பரிசு பெற்ற மாபெரும் பாராட்டில் பங்கு பெற்றார்.

ஆனால், முதல் ஷெட்யூலை நான் டைரக்ட் செய்த போது படம் இத்தனை பெரிய வரவேற்பைப் பெறப் போகிறது என்று யார்தான் எண்ணினார்கள்?

நான் கதை - வசனம் எழுதிய படங்களின் ஷூட்டிங் நடக்கும் போது உடனிருப்பேன் என்று முன்னமேயே சொன்னேன். அப்போதெல்லாம் எனக்குத் தோன்றுவதை நண்பர்களிடம் அந்தரங்கமாகச் சொல்வேன்:

''இவர்கள் 'டாக்கி' எடுக்கிறார்கள்; 'மூவி' எடுக்கவில்லை'' என்பேன். ''வசனங்களுக்கு இடை இடையே முன்கூட்டியே 'லாங்ஷாட்,' 'குளோஸ் அப்,' 'சஜஷன்' என்றெல்லாம் அடைப்புக் குறிக்கிடையில் எழுதிக் கொண்டு அதன்படி படம் பிடிக்கிறார்கள். இது சரியில்லை; செட்டுக்கு வந்த பிறகு, அதன் அமைப்பு, காட்சியின் தேவைகள் இவற்றைக் கருத்தில் கொண்டு, ஆர்ட்டிஸ்ட்டுகளுக்கு மூவ்மெண்ட் கொடுத்து, காமிராவையும் நகர்த்த வேண்டும். டிராலி, கிரேன் போன்றவற்றையெல்லாம் நிறையப் பயன்படுத்த வேண்டும்'' என்பேன்.

இந்த எனது எண்ணங்களுக்கு ஏற்பத்தான் அந்த முதல் ஷெட்யூலை முடித்தேன்.

'ரஷ்' போட்டுப் பார்த்த போது எனக்கு டென்ஷனே இல்லை. நான் தன்னம்பிக்கையுடன் இருந்தேன். அதே நேரத்தில் நான் செய்திருந்த சில தவறுகளும் எனக்குத் தெரிய வந்து என்னைத் திருத்திக் கொள்ள உதவியது. உதாரணமாக 'கட் ஷாட்'கள் நிறைய வைத்திருந்தேன். எதுவும் அளவுக்கு மீறினால் இடைஞ்சல் பண்ணும் என்று உணர்ந்தேன். என்றாலும் நான் ஒரு புதிய பாணியில் படப்பிடிப்பு நடத்தியிருந்தது அனைவருக்கும் புரிந்தது; பிடித்தும் இருந்தது. கல்யாணப் பரிசு படத்தை இயக்கப் போவது நான்தான் என்பதும் உறுதியாகி விட்டது.

படிப்படியாகப் படப்பிடிப்பு நடந்து முடிந்து விட்டது. முதல் பிரிண்ட் தயாரானதும் போட்டுப் பார்த்தோம். மீண்டும் விளக்குகள் எரிந்த போது பார்ட்னர் கிருஷ்ணமூர்த்தியை ஆர்வத்துடன் திரும்பிப் பார்த்தேன். 'ஆ! அவர் ஏன் இப்படி முகத்தைச் சுளிக்கிறார்?' திகைத்தேன்!

(மீண்டும் சந்திப்போம்)

# ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் 64 வது ஆசார்யாளின் வார்ஷீக ஆராதனை மஹோத்ஸவ வைபவம் - 8.11.91.

மஹாமந்திரியான ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களை ஆஸ்திக உலகம் நன்கு அறியும். அன்னார் வம்சத்தில் தோன்றி 64 வது பீடாதிபதியாக ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தை அலங்கரித்த மஹாபுருஷர்களான ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்ரீ சரணர்களின் வார்ஷீக ஆராதனை வைபவம் நாளது திருத்திகா-சுக்ல த்விதியை - 8.11.1991 வெள்ளிக்கிழமை தினம் அந்த மஹாபுருஷர்களின் அதிஷ்டான ஸ்தலமான கும்பகோண க்ஷேத்திரத்திலும் வழக்கம் போல நமது ஸ்ரீ பெரியவாள் நடமாடும் தெய்வம் ஸ்ரீஜகத்குரு மஹாஸ்வாமிகளின் ஆக்ஞைபடி 32 வேத வித்துக்களைக் கொண்டு நடத்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இந்த ஆராதனை வடகோடி பிருந்தாவனம் டிரஸ்டின் ஆதரவில் செய்யபட்ட போதிலும், அந்த டிரஸ்டில் போதுமான அளவு நிதி வசதி இல்லாமையால் பக்த கோடிகளின் பேருதவியாலேயே செய்யப்படும் இந்த ஆராதனையில் ஒவ்வொரு வேத் வித்துக்களுக்கும் - வஸ்திரம், தீர்த்தபாத்திரம், ஆஸனம், பாதுகை, குடை, கணிசமான தட்சணை. இவ்வளவும் கொடுத்து கௌரவிக்கப்படுகிறது. எல்லாம் ஸ்ரீ மஹாஸ்வாமிகளின் மஹத்தின் அனுகிரஹ விசேஷத்தில் நடைபெறுகிறது. இந்த வைபவத்தில் எல்லா அம்சங்களிலும் கலந்து கொள்ளும் அன்பர்களுக்கு ஸ்ரீ மஹநீயர்களின் அனுகிரஹம் பரிபூர்ணமாக சித்திக்கும். அன்பர்களை கலந்து கொள்ள அழைக்கிறோம்.

நன்கொடைகளை வடகோடி பிருந்தாவனம் டிரஸ்டு
**24, டபீர் நடுத் தெரு, கும்பகோணம் - 612 001**
என்ற விலாசத்திற்கு அனுப்பிவைக்க வேண்டுகிறோம். நன்கொடை அனுப்புவோர் தங்கள் விலாசத்தை தெளிவாக எழுதினால் பிரஸாதம் அனுப்பிவைக்கப்படும்.

செக்/டிராப்ட் அனுப்புவோர் A/C Payee என்று குறித்து அனுப்பவும்.

இங்ஙனம்
**T.S. GURUMOORTHY**
**(Chief Cashier UCO Bank Retd.)**
**Convenor & Trustee.**
**மந்திரிரத்னம் A.R. சேஷய்யா சாஸ்திரி**
**(முன்னாள் ஸ்ரீகார்யம் - ஏஜண்ட்) மேனேஜிங் டிரஸ்டி.**




''ஒரே மகள், தாயில்லாதவள்னு உன்னை ரொம்பச் செல்லமா வளர்த்த போதே நினைச்சேன், இப்படி ஒரு பரதேசியை இழுத்துக் கொண்டு வந்து கல்யாணம் பண்ண நிற்பேன்னு!'' சீறினார் அக்னிவேசன்.

ப்ரீதாவும் சூடானாள். ''அப்பா, அவர் ஒரு சாதாரண க்ளார்க்தான். ஒத்துக்கறேன். ஆனா கண்ணியமானவர். படிச்சவர், விவரமானவர். என் மனசுக்குப் பிடிச்சவர்.''

''இப்ப காதல் உன் கண்ணை மறைச்சிருக்கு, அப்படித்தான் சொல்லுவே. நாளைக்குத்தான் உணர்வே... நான் சொல்றதை.''

''நெவர்! இது ஒண்ணும் வெறும் இன்ஃபாச்வேஷன் இல்லை. எல்லா விதத்திலும் அவர் எனக்குத் தகுதியானவர்ன்னு தெரிஞ்சுட்டுத்தான் அவரைக் காதலிக்கவே ஆரம்பிச்சேனாக்கும்!''

''ஆனா அந்தஸ்திலே அவன் உனக்குத் தகுதியானவன் இல்லையே? நம்ம கம்பெனியிலே வேலை பார்த்து ஒண்ணாம் தேதியானால் நம்மிடமே கையேந்துகிறவனாச்சே?''

''அதை ஒரு தகுதியா நான் இதுவரை நினைச்சதுமில்லே, இனிமேல் நினைக்கப் போறதுமில்லை.''

''ஆனா நான் நினைக்கிறேன். இந்தக் கல்யாணம் நடக்காது!''

ப்ரீதாவுக்குத் தாங்க முடியவில்லை. ''டாடி! இதுவரை நீங்க என் ஆசைகளைப் புறக்கணிச்சதில்லே.''

''அதனாலதான் அழுத்தம் திருத்தமாச் சொல்றேன். நீ யாரை சிபாரிசுக்கு அழைச்சிட்டு வந்தாலும் நான் அசைஞ்சு கொடுக்க மாட்டேன், உங்க சித்தப்பாவே ஆனாலும் சரி.''

போய் விட்டார்.

பீச்சில் கதிரைச் சந்தித்துக் குமுறினாள் ப்ரீதா.

''எங்கப்பா என் காதலை மறுத்ததில் கூட எனக்கு ஆச்சரியமில்லே கதிர். ஆனா அதற்கு அவர் சொன்ன காரணம்? அந்தஸ்து! யூ நோ கதிர், அந்தஸ்து எல்லாம் பார்க்கிறவரே இல்லை எங்கப்பா.''

''நானும் ரொம்ப உயர்வாகத்தான் நினைச்சிட்டிருக்கிறேன், என் பாஸை. நீ சொல்றதை நம்ப எனக்கும் கஷ்டமாகத்தான் இருக்கு... இப்ப என்ன பண்றது?''

''தம் தம்பி மேல் ரொம்பப் பிரியம் அவருக்கு. அதனால் சித்தப்பாவைத் தான் பிடிக்கலாம்னு நெனைச்சிருந்தேன். ஆனா சித்தப்பாவையே அழைச்சிட்டு வந்தாலும் அசைய மாட்டேன்னு சொல்லிட்டார்.''

''அப்படி அவரே சொன்னாரா?'' மணலை அளைந்த கைகள் திடீரென்று நின்றன. ''அப்ப சித்தாப்பாவையே தான் அனுப்பணும்.''

''வாட் டூ யூ மீன்?''

''யெஸ். எப்போ அப்படி அவரே தன்

**கே. பி. ஜனார்த்தனன்**

வாயால் சொன்னாரோ அப்ப அவரே தம்பி சொன்னால் தம் மனசு எங்கே மாறிடுமோன்னு உள்ளுக்குள்ளே பயப்படறார்னு தான் அர்த்தம். அதான் உன்னைத் தடுக்கப் பார்த்திருக்கிறார்.''

''ஓகே! ஒரு மாசமா நானும் அப்பாவோட சம்மதத்தை வாங்கப் படாதபாடு படறேன். இந்த முயற்சியையும் செய்து பார்த்திடறேன்.''

எழுந்தார்கள்.

''அண்ணா!'' தயங்கித் தயங்கி ஆரம்பித்தார் சீனிவாசன். ''கதிர் நம்ம ப்ரீதாவுக்கு ஐடியல் மாட்ச்....''

இயக்கிக் கொண்டிருந்த புல்வெட்டியை நிறுத்தி விட்டுத் தம்பியின் தோளில் கைவைத்தபடியே தோட்டத்தில் நடக்கலானார், அக்னிவேசன்.

''எனக்குத் தெரியும்டா, என்கிட்டே தானே வேலை பார்க்கிறான்! துடிப்பான இளைஞன், புத்திசாலி!''

'தெரியுமா? தெரிஞ்சும் ஏன்?' என்றது பார்வை.

''யெஸ். எனக்குத் தெரியும். தெரிஞ்சும் வேணுமின்னுதான் எதிர்ப்புக் கொடுத்திட்டிருக்கேன், அவங்க கல்யாணத்துக்கு. அப்பத்தான் அவள் காதலின் ஆழத்தைப் பத்தி அவளே தெரிஞ்சுக்குவா. தகுதியானவனாகப் பார்த்துத் தேர்ந்தெடுத்த ஒருத்தனைத்தான் காதலிச்சுக் கல்யாணம் பண்ணிக் கொண்டோம்னு அவள் நிச்சயமான மனசோட என்னிக்கும் நிம்மதியா இருப்பா. எடுத்த எடுப்பிலேயே நானும் ஓகே சொல்லிட்டா, நாளைக்கு ஒருவேளை அந்தஸ்து சம்பந்தமாக ஏதாவது ஏற்றத்தாழ்வு அவள் மனசிலேயே முளைக்கலாம். அழகையும் அறிவையும் பார்த்து நாம அவசரப்பட்டுட்டோமோன்னு நினைச்சு அவள் வருத்தப்படலாம். அந்த வருத்தத்துக்கு அவன் - தபுவர் பாய் - இரையாகிடக் கூடாது இல்லையா! அதான் வேணுமின்னே இப்படி... தன் காதலை அவள் புடம் போட்டுப் பார்த்துக்க ஒரு வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுத்தேன். அதைத் தாண்டி அவள் உறுதியா இருக்கிறது இப்ப தெரிஞ்சு போச்சு. அதனால எனக்கு இப்ப முழு சம்மதம்!''

அசந்து போய் நின்றார் சீனிவாசன்.

---

## ''ஒரு பூவே தலைமை தாங்கிய பூகம்பம்!''

◆ 'நேற்றுவரை நந்தவனம்' விறுவிறுப்பும், பரபரப்பும் கொண்டதொரு சுவையான படைப்பு! தொடரின் க்ளைமாக்ஸ் - எதிர்பாராத சஸ்பென்ஸாக இருந்தது. ஓவியர் கரோவின் ஓவியங்களும் ஒரு ப்ளஸ் பாயிண்ட்!
தர்மபுரி - 2, வித்யா.

◆ இருபத்தைந்து வாரங்கள் போனதே தெரியாமல் வித்தியாசமான நடையில் எழுதியிருந்தார். மீராவின் பாத்திரம் மறக்க முடியாத ஒன்று.
குத்தாலம், குமரேசன்.



◆ மிகவும் எளிமையான நடையில் எழுதி, தெளிவான கருத்தை அழகாக உணர்த்தியிருந்தார் அனுராதா ரமணன். எங்கே மீராவின் திருமணம் நின்று விடுமோ என்று பயந்து போய் விட்டேன்!
மொரப்பூர், ச. உமர்கான்.

◆ அனுராதா ரமணனின் முற்போக்கான சிந்தனைகளிலிருந்து வெளிவந்த கதைகளின் வரிசையில் 'நேற்றுவரை நந்தவனம்' கதையும் ஒன்று. அழுத்தமான கதாபாத்திரங்கள், தெளிவான நடை இவையெல்லாம் கதையை நன்கு பளிச்சிட வைத்தன.
மொரட்டுப்பாளையம், இராஜேஸ்வரன்.

◆ திருமணத்தில் துவங்கி திருமணத்தில் முடியும் நேற்றுவரை நந்தவனம் தொடர் கதை அனுராதா ரமணனின் படைப்புகளில் குறிப்பிட்டுச் சொல்லும்படி சிறப்பு மிக்கது.
மகிழஞ்சேரி, கே. ரவிச்சந்திரன்.

◆ முதலில் மீராவுக்காக அமைத்துக் கொடுத்த நந்தவனம் உடனே அழிந்து விட, இரண்டாவது நந்தவனமும் கிடைக்காமல் போய் விடுமோ என மனம் கவலைப்பட்டது. கடைசி அத்தியாயத்தில் எதிர்பாராத முடிவைக் கொடுத்து அசத்தி விட்டார் அனுராதா ரமணன். குடும்பம் + மர்மக் கதையைப் படித்தது போன்ற திருப்தி.
சென்னை - 45, ஏ. ஜஹம்பர் காதர்.

◆ ஓ... ஒரு பூகம்பத்திற்குப் பூவே தலைமை தாங்கிய அதிசயம்! ராஜேஸ்வரியைத்தான் குறிப்பிடுகிறேன்.
தருமபுரி, —கொ. இரமேஷ்.

## உங்கள் செல்வம் :



# நல்ல முதலீடு: லாபம் தரும்!

நவம்பர், டிசம்பர் மாதங்களில் பங்கு மார்கெட்டுக்கு வரும் நிறுவனங்கள் :

### UNIKOL BOTTLERS LTD

உத்தரப் பிரதேசத்தில் ஸஹிபாபாத் என்னுமிடத்தில் உருவாகும் இந்தத் தொழிலகம். குளிர் பானங்கள் தயாரிக்கும் அமெரிக்காவின் 'பெப்ஸி' நிறுவனத்துடன் ஒப்பந்தம் செய்து கொண்டு 'லெஹார்' என்ற பெயரில் விற்பனையாகும் குளிர் பானங்களுக்கு மற்றொரு தொழிலகம் இது. இங்கே ஆண்டொன்றுக்கு ஒரு கோடியே 40 லட்சம் கேஸ்கள் தயாராகும். ஒரு கேஸ் என்பது 24 பாட்டில்கள் கொண்டது. உத்தரப் பிரதேசத்திலும் டில்லியிலும் ஹரியானாவிலுமாக பத்துக் கோடி கேஸ்களுக்குத் தேவை இருப்பதாக ஒரு கணிப்பு. இதில் இருபது சதம் மார்கெட்டையாவது நாளடைவில் பிடிக்க முடியும் என்று இந்நிறுவனம் கருதுகிறது. இவர்கள் திட்டத்தை ICICI யூனிட் டிரஸ்ட், Canbank Mutual Fund போன்ற நிதி நிறுவனங்கள் ஆராய்ந்து ஆதரவு தருகின்றன. பொது மக்களுக்கு ஒதுக்கப்படும் பங்குகளுக்குப் போட்டி நிறையவே இருக்கும் என்று கருதப்படுகிறது.

### LOTUS CHOCOLATE CO LTD

ஆந்திர மாநிலத்தில் உருவாகும் இந்தத் தொழிலகம் ஆண்டொன்றுக்கு 3000 டன் எடையில் சாக்கலேட்டுகள் தயாரிக்கும் என்றால் நாவில் நீர் ஊறுகிறது அல்லவா? இந்தத் திட்டத்தைச் செயல்படுத்துகிறவர்கள் என். விஜயராகவனும் பிரபல திரைப்பட நடிகை சாரதாவும் ஆவர்.

கோக்கோ எனப்படும் தாவர விதைகளைப் பயன்படுத்தி கோக்கோ வெண்ணெய் உருவாக்கி, அதனை சாக்கலேட் தயாரிப்பில் இந்த நிறுவனம் உபயோகிக்கும். இதற்காக பிரிட்டனில் உள்ள பிரபலமான ஆன் கிரிட்லாண்ட் நிறுவனத்துடன் ஒப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. இவர்கள் சாக்கலேட் தயாரிப்பின் நுணுக்கங்களைக் கற்றுத் தருவதுடன், புதிய புதிய ரகங்களில் ருசிகளில் சாக்கலேட் தயாரிக்கவும் வழி காட்டுவர்.

இவர்கள் இன்னொரு புத்திசாலித்தனமான காரியத்தையும் செய்துள்ளனர். அதாவது, விற்பனை விநியோகத்துக்கு ஏற்கெனவே பிரபலமடைந்து, அனுபவம் உள்ள பிரிட்டானியா (பிஸ்கட்) நிறுவனத்துடன் ஓர் ஒப்பந்தம் செய்துள்ளனர். இவர்கள் பொதுமக்களுக்கு விநியோகிக்கும் பங்குகளின் மதிப்பு 220 லட்சம் ரூபாய். இந்தப் பங்குகள் நல்ல வரவேற்பைப் பெறும் என்று கருதப்படுகிறது.

### EMPEE SUGARS & CHEMICALS LTD.

எம்பீ என்ற பெயருடைய குரூப் நிறுவனங்கள் ஏற்கெனவே பல ஹோட்டல்கள், போக்குவரத்துத் துறை, ஏற்றுமதிக்கான மது வகைகள் முதலியவற்றில் ஈடுபட்டிருக்கின்றன. அந்த அனுபவத்துடன் இவர்கள், KODAY நிறுவனத்துடன் கூட்டுச் சேர்ந்து அவர்களின் தயாரிப்புக்களை உற்பத்தி செய்யத் திட்டமிட்டுள்ளனர். இவர்களின் பிரதான உற்பத்தி சர்க்கரை. நாளொன்றுக்கு 2500 டன் உற்பத்தி செய்யத் திட்டம். நெல்லூர் மாவட்டம் நாயுடு பேட்டையில் தொழிலகம் உருவாகிறது. பொது மக்க



"யோவ், தரகரே என்னய்யா இது பொண்ணு சிவப்புன்னு சொன்னே.. கறுப்பா இருக்கு..."

"நான்தான் அப்பவே சொன்னேனே, பொண்ணுக்கு 'மச்சம்' கொஞ்சம் அதிகமுன்னு.."

- ஆர். வசந்தகுமார்.

---

ளுக்கு $5\frac{1}{2}$ கோடி ரூபாய்க்குப் பங்குகளை விநியோகிக்கின்றனர். மக்களின் ஆதரவு கணிசமான அளவில் இருக்கும் என்று கருதப் படுகிறது.

### PRAKASH INDUSTRIES LTD

இந்த நிறுவனம் ஏற்கெனவே நன்கு இயங்கி, பங்குதாரர்களுக்குக் கணிசமான லாபம் பங்கிடு அளித்து வருகிறது. பி.வி.ஸி. குழாய்கள், டீவி டியூப்கள், வீடியோ-ஆடியோ டேப்புகள் முதலியவற்றை வெவ்வேறு தொழிலகங்களில் உற்பத்தி செய்கிறது. இத்தகைய நிறுவனம், மேலும் இவை விட்டு, பிரதான தொழில் துறையான இரும்பு உற்பத்தியில் ஈடுபட முனைந்திருக்கிறது. மத்திய பிரதேசத்தில் உருவாகப் போகும் தொழிலகம் 1,50,000 டன் இரும்பு உற்பத்தி செய்யும். இந்த வட்டாரத்தில் நிலக்கரி எளி தாகக் கிடைப்பது கூடுதல் வசதி. எஃகுத் துறையில் நிரம்ப அனுபவம் உள்ள சங்கமேச்வரன் (முன்னாள் நிர்வாக இயக்குனர், SAIL) போன்றவர்களை இயக்குனராகக் கொண்டுள்ளது. LURGI CHEMIE என்ற ஜெர்மானிய நிறுவனம் தொழில் நுணுக்கங்களைப் பகிர்ந்து கொள்கிறது. இந்த நிறுவனம் நவம்பர் வாக்கில் வெளியிடும் டிபன்சர்களுக்கு நல்ல வரவேற்பு இருப்பது உறுதி. பகுதி அளவில் பங்குகளாக மாறக் கூடிய டிபன்சர்கள் பற்றி அடுத்த வாரம் விளக்கமாகக் கூறுகிறேன்.

- வி. கோபாலன்

# ஐம்பது ஆண்டுகளுக்கு முன்...

## கல்கி அக்டோபர் 16, 1941

ருஷ்யாவில் சர்வாதிகாரி ஸ்டாலின் பழிப்புக்குள்ளாகி மதிப்பிழந்தது சமீப சரித்திரம். ஆனால் 1941 ல் அவர் பெரிய ஹீரோ, கல்கியின் மேலட்டையில் இடம் பெறும் அளவுக்கு!

### அட்டைப்பட விளக்கம்

உலகத்திலே இன்று முதலாவது மகா வீரன் என்று சொல்லக்கூடியவர் சர்வாதிகாரி ஸ்டாலின். ''இரும்பு மனிதன்'' என்னும் பொருள் கொண்ட அந்தப் பெயர் அவருக்குத் தகும் என்பது இப்போது நிதரிசனமாகி விட்டது. பிரசித்தி பெற்ற வீர பிரஞ்சு சைன்யத்தை மூன்றே வாரத்தில் பிளந்து நாசமாக்கிய நாஜிப் படைகளை, இந்த தீர புருஷர், யுத்த அநுபவமே இல்லாத ருஷியக் குடியானவர்களை வைத்துக் கொண்டு நாலு மாதமாக எதிர்த்து நிற்பதைப் பார்த்து உலகமே மூக்கில் விரல் வைத்து அதிசயப்படுகிறது. ''நாஜிகள் மாஸ்கோவை அடைந்தாலும் கார்க்கோவை அடைந்தாலும் ஊரல் மலையையே அடைந்தாலும் ருஷியா மட்டும் தோல்வியை அடையாது'' என்று உலகம் நம்பிக் கொண்டிருக்கிறது.

### ஒரு முழுப்பக்க விளம்பரம்!

தமிழ் நாட்டிற்குத் திருக்குறளை அளித்த கவி திருவள்ளுவர் வெலிங்டனில் அக்டோபர் 11 முதல் திரையில் காக்ஷியளிக்கிறார். ஒவ்வொரு தமிழரும் கண்டு களித்துப் போற்றிப் புகழ வேண்டிய திகட்டாத காட்சி.

(இந்த ஏழுவரிகள் தவிர பக்கம் முழுதும் வெள்ளைத் தாளாக உள்ளது!)

### ராஜாஜி வருகை

இம் மாதம் 6 உ நமது தலைவர் ராஜாஜி பல மாத காலமாய்த் தாம் வசித்த சின்ன சிறைச்சாலையிலிருந்து நாம் வசிக்கும் பெரிய சிறைச்சாலைக்கு வந்து சேர்ந்தார். இது நமக்கெல்லாம் மகிழ்ச்சி தரும் விஷயந்தான். ஆனால், ராஜாஜிக்கு இந்த 'விடுதலை'யில் உற்சாகம் ஒன்றும் இராது. தேச நிலைமையைப் பார்க்கும்போது ''ஏன் வந்தோம்?'' என்றுதான் இருக்கும். சிறையில் இருந்த வரையில் ராமாயணமும், திருக்குறளும் படித்துக்கொண்டு மனக் கவலையில்லாமலாவது இருந்திருப்பார். வெளியில் வந்ததும் எவ்வளவோ பெரும் பொறுப்புகள் வந்து அவர் தலையில் சுமருகின்றன. மேற்கே ஸிந்து மாகாண பிரதம மந்திரி அல்லாபக்ஷ் முதல் கிழக்கே 'ஸ்டார் ஆப் இந்தியா'வில் ஸ்ரீ போத்தன் ஜோஸப் வரையில், வடக்கே லாகூர் 'டிரிப்யூன்' பத்திரிகை முதல் தெற்கே திருச்சி டாக்டர் டி.எஸ்.எஸ். ராஜன் வரையில், ''ராஜாஜி வழி காட்டுவார்!'' என்ற ஆசையை ஜனங்களுக்கு உண்டு பண்ணியிருக்கிறார்கள்.

### தலைதீபாவளியில்



## அவசரச் செய்தி

"வள்ளி! உறையூரிலிருந்து செய்தி கொண்டு வந்திருக்கிறான். அவசரச் செய்தியாம். நான் போய் வருகிறேன்" என்றான் பொன்னன்.

"நல்ல அவசரச் செய்தி! அரை வயிறு கூட நிரம்பியிராதே? எனக்குப் பிடிக்கவேயில்லை" என்று வள்ளி முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

"அதற்கென்ன செய்கிறது, வள்ளி! அரண்மனைச் சேவகம் என்றால் சும்மாவா?" என்று பொன்னன் சொல்லிக் கொண்டே அவளுடைய சமீபம் சென்றான். கோபங்கொண்ட வள்ளியின் முகத்தைத் தன் கைகளால் திருப்பினான். வள்ளி புன்னகையுடன் தன் முகத்தின் மேல் விழுந்திருந்த கூந்தலை இடது கையால் எடுத்துச் சொருக்குப் போட்டுக் கொண்டு, "சீக்கிரம் வந்து விடுகிறாயா?" என்று சொல்லி விட்டு, பொன்னனை அண்ணாந்து பார்த்தாள். பொன்னன் அவளுடைய முகத்தை நோக்கிக் குனிந்தான். அப்போது வெளியிலிருந்து, "எத்தனை நேரம், பொன்னா?" என்று கூச்சல் கேட்கவே, பொன்னன் திடுக்கிட்டவனாய், "இதோ வந்து விட்டேன்" என்று கூச்சல் போட்டுக் கொண்டு வெளியே ஓடினான்.

- பார்த்திபன் கனவு - கல்கி;
அத்தியாயம் - 1

## பார்த்திபன் கனவு வர்மா படம்



## ராஜாஜியும் ராமாயணமும்

இரண்டாம் நாள் காலையில் எழுந்திருக்கும்போதே, சிறிது பரபரப்புடன் தான் எழுந்திருந்தேன். "எட்டு மணிக்கு வால்மீகி ராமாயணம் கேட்கப் போக வேண்டும்" என்ற எண்ணந்தான் அத்தகைய பரபரப்பை அளித்தது. ஆனால், முதல் நாள் அவ்விதமான ஆவல் இருந்ததில் ஆச்சரியம் எதுவுமில்லை; பின்னர், ஒவ்வொரு நாளுமே அந்த ஆவல் இருக்கத்தான் செய்தது! எண்பத்திரண்டு நாளைக்குப் பிறகு விடுதலையாகப் போகிற அன்று காலையில் கூட, "இன்று வால்மீகியில் இந்திரஜித்து கட்டமாயிற்றே! கேட்டு விட்டுப் போனால் என்ன?" என்று தோன்றியது.

இராமாயணத்தின் மகிமை ஒருபுறமிருக்கட்டும். அதைச் சிறைச்சாலையில் ராஜாஜியுடன் சேர்ந்து படித்து அநுபவித்ததில் உண்டான ஆனந்த அநுபவமே தனிதான்.

ராஜாஜியே இராமாயணம் படித்து, அதற்கு பாஷ்யமும் சொல்கிறது என்றால், அதைக் கேட்பதற்காகத் திருச்சி சிறைக்குத் தானா போகலாம்? அந்தமானுக்குக்கூடப் போகலாமே!

- மூன்று மாதம் கடுங்காவல் - ரா.கி.

## அட்டையில் சினிமா

சென்னிமலை
18-9-41

தங்கள் பத்திரிகையின் அட்டையில் சினிமா நடிகைகளின் படத்தைப் பிரகரிப்பதைக் காட்டிலும் தேசியத் தலைவர்களின் படத்தைப் பிரகரித்தால் இன்னும் அழகாக இருக்கும்.

வி.பி. வீரப்பா.

**(தேசியத் தலைவர்களின் படங்கள் 'அழகாக' இல்லாவிட்டாலும் அடிக்கடி வெளியிடுவதாகவே உத்தேசம். - ஆசிரியர்)**

கொழும்பு
18-9-41

தங்கள் "கல்கி" பத்திரிகையை (மூன்றாவது இதழிலிருந்து) கண்டுகளித்தவர்களில் யானும் ஒருவன்..... தங்கள் பத்திரிகையில் முகப்பு அட்டையில் சினிமா நடிகர், நடிகைகளின் படங்களை வெளியிட இடந்தரக் கூடாது எனத் தங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

த.ந. வேல்.

**(கலைத் துறையில் புகழ் பெற்றவர்களுக்கும் சில சமயம் நமது முகப்பு அட்டையில் இடங் கொடுத்து கௌரவிக்க விரும்புகிறோம். இதை ஆட்சேபிக்கக் கூடாது என்று தங்களைக் கேட்டுக் கொள்கிறேன். - ஆசிரியர்)**

- வட்டமேஜை



☛ அமீனா விவகாரம்...



☛ BLOW HOT; BLOW COLD

# தி.மு.க.வின் எதிர்காலம் எப்படி இருக்கும்?

● நா. வெற்றிச் செல்வன், புதுவை.

? கல்கி பொன் விழா 1991, ஆகஸ்டு திங்களில் நடைபெறும் என்றும் அன்று விழா மேடையில் பரிசு பெற்றவர்கள் கௌரவிக்கப்படுவார்கள் என்றும் கல்கியில் குறிப்பிட்டிருந்ததாக ஞாபகம்?

! 'பொன் விழா ஆண்டின் தொடக்க விழா, நிறைவு விழா என்று இரண்டு வேண்டாம். நிறைவு விழா ஒன்றே போதும்' என்று பெரியவர்கள் சரியான முடிவெடுத்ததுதான் காரணம். சிக்கனம் பற்றி ஆட்சியில் இருப்பவருக்கு உபதேசம் செய்யும் நாம், அதைக் கடைப்பிடிக்க வேண்டாமா? நிறைவு விழாவில், பரிசு பெற்றவர்கள் நிச்சயம் கௌரவிக்கப்படுவார்கள்.

● விஜயலட்சுமி சுவாமிநாதன், திருச்சி.

? நல்ல படங்கள் சில ஓடாததற்கு என்ன காரணம்?

! நல்லனவற்றைப் போற்றி ஊக்குவிக்க முன்வராத நமது அலட்சிய மனப்பான்மைதான் காரணம்.

● என். சம்பத், தூத்துக்குடி.

? கழிவு காகிதம், பதூரன் விலை ஷிறைக் கப்பட்டிருப்பது குறித்து?

! பசிக்குக் காகிதத்தைக் கடித்து விழுங்கி விட்டுக் கவலையை மறந்து ஜாலியாய் பதூரன் ஊதி மகிழலாம்!

● டி. அனு. போடிநாயக்கனூர்.

? தி. மு. க. வின் எதிர்காலம் எப்படி இருக்கும்?

! வெறுப்பைக் கொட்டி, வசைபாடிச் செய்யப்படும் பிரசாரம் ஏமாற்றத்தின் பிரதிபலிப்பாகவும் பலவீனமாகவும் கருதப்படும். மேலும் தோல்விகளுக்கே வழிவகுக்கும்.

● எஸ். வைத்தியநாதன், சென்னை.

? 'நான் குடிப்பதில்லை, அமைச்சர்களும் குடிப்பதில்லை என்றுதான் நினைக்கிறேன்' என்று கூறும் முதல்வர் பற்றி?

! முதல்வர் நினைப்பதுதான் நிஜம் என்று கூற எந்த அமைச்சரும் முன்வராததுதான் அவருடைய துரதிர்ஷ்டம்!

● ஜி. சத்தியமூர்த்தி, கும்பகோணம்.

? கும்பகோணம் எம். எல். ஏ. ராமநாதன், கோவில் அர்ச்சகர்களுக்கு மோட்டார் சைக்கிள் வழங்குமாறு கோரிக்கை எழுப்பியிருக்கிறாரே?

! பெட்ரோல் அலவன்ஸும் சேர்த்துக் கேட்டிருக்கலாம்! அர்ச்சகர்கள் ஏழைமையில் உழலாமல் இருக்க வகை செய்தாலே பெரிய காரியம்.

● ஜெயா சீனிவாசன், பழனி.

? 'என்னை வசைபாடியவர்களுக்கு மந்திரி பதவி கொடுத்துள்ளேன்' என்று ஜெயலலிதா கூறுகிறாரே?

! தமது சகிப்புத் தன்மைக்கு எடுத்துக் காட்டாகக் கூறியிருக்கிறார். என்றாலும் முதல்வரின் BLOW HOT; BLOW COLD குணம் அனைவரும் அறிந்ததே.

● தெ. சு. திலீபன், வத்ராயிருப்பு.

? திருநாவுக்கரசு சட்டசபையில் மௌனமாய் இருக்கிறாரே?

! சம்மதத்துக்கு அடையாளம் என்று யாருக்கோ எதையோ குறிப்பால் உணர்த்த முயற்சி செய்கிறார் போலும்!

● ஏ. கோபாலகிருஷ்ணன், கட்டாக்.

? 'ஆங்கிலக் கலைச் சொற்களை மொழி மாற்றம் செய்யாமல் ஒலி மாற்றம் செய்து ஏற்பது தமிழின் வேகமான வளர்ச்சிக்குத் துணைபுரியும் என்று தலையங்கத்தில்

☛ பெட்ரோல் அலவன்ஸ்?





☛ மௌனத்தின் அர்த்தம்...



☛ நாடக மேடையில்... ☛... சாதனையாளர்கள்.... ☛ ...மூவர்!

கூறப்பட்டுள்ளது எனக்குப் புரிய வில்லையே?

! டெலிஃபோன் என்ற ஆங்கிலச் சொல்லைத் தொலைபேசி என்று கூறாமல் டெலிபோன் என்றே எழுதுவதும் பேசுவதும் ஒலி மாற்றம். இவ்வாறு லத்தீன், கிரேக்க, மற்றும் உலக மொழிகள் பலவற்றில் உள்ள சொற்களை அப்படி அப்படியே இலேசான ஒலி மாற்றத்துடன் ஏற்றுத்தான் ஆங்கிலம் வேகமான வளர்ச்சியுற்றது. இதையே நாமும் கடைப்பிடிப்பது, தமிழ் மூலம் சகல விஞ்ஞானத் துறைகளிலும் பாடம் போதிப்பதை இலகுவாக்கும் என்பதுடன், இவ்வாறு படித்துத் தேறும் விஞ்ஞானிகளும் டாக்டர்களும் இன்ஜினீயர்களும் உலக அரங்கில் ஒருவரோடு ஒருவர் அளவளாவிக் கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்வதும் எளிதாகும். தமிழ், கட்டிப் பிடிக்க முடியாத வேகத்தில் வளரும். தமிழில் சொல்ல முடியாத விஞ்ஞான விஷயம் இல்லை என்ற நிலை உருவாகும்.

● ஏ. ஜுபருல்லா ரஹ்மானி, சென்னை.

**? 92 வயதுக் கிழவர் 22 வயதுப் பெண்ணை மணமுடித்து குழந்தை பெற்றிருக்கிறார் என்பது ஆதாரத்துடன் கூடிய செய்தி. 60 வயது அராபியன் 18 வயதுப் பெண்ணைத் திருமணம் முடித்து வாழ முடியாதா? இந்து மதத்தில் பால்ய விவாஹங்கள் இல்லையா?**

! அமீனா விவகாரத்தில் அவள் மைனர் பெண் என்பதும், அவள் விருப்பத்துக்கு மாறாகக் கட்டாயமாக மணமுடித்து அனுப்பப்பட்டிருக்கிறாள் என்பதும்தான் விவகாரம். வயதான கணவரை ஒருத்தி விரும்பி ஏற்றால் யார் தடை கூற முடியும்! இந்து மதமா, இஸ்லாமா என்பதல்ல பிரச்னை. வரதட்சிணைக் கொடுமை, பால்ய விவாகம் போன்றவை எந்த மதத்தில் இருந்தாலும் அவை ஒழிய நாம் பாடுபட வேண்டுமே தவிர, அந்தக் கொடுமைகளைக் காரணம் காட்டி அநீதிகளை சகித்துக் கொள்ளக் கூடாது. நம் கவனத்துக்கு வராத பல கொடுமைகள் நடக்கின்றன என்பதால் கவனத்துக்கு வரும் ஒரு கொடுமையை எதிர்க்காமல் இருப்பதும் தவறு.

● அ. ஜமால் மொய்தீன், செங்குன்றம் ❑

**? ஆக்கிரமிப்பை அகற்ற வந்த அரசு அதிகாரிகளைத் தங்கள் பணிகளைச் செய்ய விடாமல் அடித்தும் இருக்கிறாரே மத்திய பெண் மந்திரி மம்தா பானர்ஜி?**

! அதிகாரிகளைத் தடுத்ததில் நமக்குத் தெரிய வராத ஏதேனும் நியாயமான காரணம் கூட இருந்திருக்கலாம்; ஆனால் அடிப்பது என்பது.... நமக்கு அதிர்ச்சியாக இருக்க வேண்டாம் என்பதற்காகத்தான் பெயரிலேயே மமதையைக் கொண்டிருக்கிறாரோ!

● த. சத்தியநாராயணன், அயன்புரம்.

**? சமீபத்திய சாதனையாளர்?**

! அமெரிக்காவிலிருந்து வந்து Driving Miss Daisy என்ற நாடகத்தை நடித்துக் காட்டிய மூவர். அரங்கின் மையத்தில் ஓர் ஒற்றை சோபா; அது டெய்ஸி என்ற வயதான மாதுவின் வரவேற்பறை! வலப்புறம் ஒரு மேஜை நாற்காலி; அது வேறு ஊரில் இருக்கும் அவர் மகனின் காரியாலயம்! இடப்புறம் இரண்டு பெஞ்சுகள்; அவை தாம் டெய்ஸியின் கப்பல் மாடல் கார்! இந்த 'ஸெட்'டை வைத்துக் கொண்டு மூன்றே பேர் நடித்த அந்த நாடகத்தில், நம்மைச் சிரிக்க வைத்து, நெகிழ வைத்து, அழ வைத்து... என்ன பாடுபடுத்தி விட்டார்கள்! வயதான மாதுவினால் கார் ஓட்ட முடியாது என்பதால் அவருக்கு ஒரு டிரைவரை ஏற்பாடு செய்கிறார் மகன். நீக்ரோ டிரைவரை, நீக்ரோ என்பதால் அல்ல, தம் கையாலாகாத்தனத்தை உணர்த்துகிறார் என்பதால் முதலில் வெறுக்கிறார் வயதான மாது. படிப்படியாக வெறுப்பு மாறி, நட்பு மலர்கிற அழகு இருக்கிறதே, அது, அதிகாலை நேரத்தில் உங்கள் வீட்டுத் தோட்டத்தில் மலரும் செம்பருத்திப் பூவின் எழிலைக் காண்பது போன்றது.

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
அ. ஜமால் மொய்தீன்,
3-A, தர்கா தெரு,
செங்குன்றம்,
சென்னை - 52

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2344145; சர்க்குலேஷன் மானேஜர் : 2344190; விளம்பரம் - சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 150/- விமானத் தபால்: ரூ. 350/-.

# வீட்டிற்கு அழகான கதவு



## மனதிற்கு இதமான அமைதி

- தேர்ந்தெடுக்கப்பட்ட உயர்தர மரம்
- ஈரப்பதம் குறைக்கப்பட்டது
- ரசாயன கலவை பாதுகாப்பு
- நேர்த்தியான இயந்திர வடிவமைப்பு

# மாயூரம் டிம்பர் கதவுகள்

அழகானவை,

உறுதியானவை

**Mayuram Timber & General Trading Corpn.**

Show Room: 13, Rameswaram Road, T.Nagar,
Madras – 600 017, Tel: 445207.

H.O. 83, G.S.T. Road, Tambaram – 600 045, Ph: 465297

Also available at **Mayavaram Timber Depot**

No. 4, Post Office Road
Mayiladuthurai, Tanjore Dist.
Phone: 3216

FUTURE ADS

REGISTERED NO. M 4392
Registered as Newspaper in Srilanka

இதயத்திற்கு இதமானது

திருமதி ஷீலா பால், BSc., D.N.D.,
உணவியல் வல்லுநர் கூறுகிறார்.

"நல்லெண்ணெய் இரத்தத்தில் கொலஸ்ட்ரால் அளவைக் குறைக்கின்றது ஆகவே தான் நமது முன்னோர்கள் அதை "நல்ல எண்ணெய்" (தமிழ்) "மஞ்ச்சி நூனெ" (தெலுங்கு) என்று அழைத்தனர். இது உடல் ஆரோக்கியத்திற்கு பாதுகாப்பானது என்பதால்தான் தென்னிந்தியர்கள் சமையல் எண்ணெய்யாகப் பயன்படுத்துகின்றனர்."

Sheila Paul



Mrs.Sheila Paul B.Sc.,
Diploma in Nutrition & Dietet
Senior Dietition
Madras



இதயம் நல்லெண்ணெய் தயாரிப்பில் தரத்தில் சிறந்த எள் மட்டுமே உபயோகிக்கப்படுகின்றது. பிஞ்சு எள் மற்றும் பொக்கு முழுவதுமாக நீக்கப்படுகின்றது. ஆகவே இதயம் நல்லெண்ணெய் பொங்குவதில்லை. பூரி, வடை, பஜ்ஜி எது வேண்டுமானாலும் தயார் செய்யலாம்.




SILVER SPOON

இதயம் சுகமாக்கும் எதையும் சுவையாக்கும்

இதயம்
நல்லெண்ணெய்